# குமரகுருபரன்

மலர் 5, இதழ் 6

ஆனி 1954

[June / July 1954]

Record no. 308

*Kumarakuruparaṉ*

*Malar 5, itaḻ 6*

*Āṉi 1954*

*[June / July 1954]*

Record no. 308

உ

சிவமயம்

# குமரகுருபரன்

மலர் 5 1954-ஆம் ஆனித் திங்கள் இதழ் 6



தனிப்பிரதி விலை 2 அணா வருட சந்தா ரூ. 1½

## ஆசிரியர் குழு.



## உள்ளுறை   பக்கம்



Best copy available.

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை





மலர் 5 | 1954-ஆம் ஆனித் திங்கள் | இதழ் 6


# சிதம்பர மும்மணிக் கோவை


தருமபுராதீனப்புலவர், சித்தாந்தரத்நாகரம், வித்துவான்,
திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், ஓரியண்டல் காலேஜ், தருமபுரம்.


( கட்டுரை 13 )



சிதம்பர மும்மணிக் கோவையின் ஐந்தாவது பாட்டின் விளக்கம் 'குமரகுருபரன்' இதழ்களில் சில திங்களாக வெளிவருகின்றது. அவற்றை ஒருங்கு வைத்து, இக்கட்டுரையைப் பார்த்துணர்தல் தொடர்ச்சியுணர்விற்குத் தக்கதாகும்.

### 1. தொண்டர் குறிக்கோள் வழுவாமை

தவத்தால் பெரியர். தொண்டுகளாலும் அளவில்லாத பெருமைகளை உடையவர். முயற்சியில் சலித்தல் இல்லாத பயிற்சியர். இராப்பகலாக வெறுப்பே இன்றிப் பலகாலம்

ஓதிவரும் ஊக்கத்தினர். எல்லாக்கலைகளையும் இனிது கற்றுணர்ந் தவர். அக்கலையறிவு நிரம்பியவர். கற்றதனுல் ஆய பயன் வாலறிவன் நற்ருள் தொழுதல் என்னும் குறிக்கோள் வழுவாதவர்.

## 2. அளந்துணர்தல்

சத்தும் அசத்தும் பிரமேயம். அச்சத்தையும் அசத்தையும் அறியும் ஆன்மாவே பிரமாதா. ஆன்மாவின் அறிவாகிய ஞான சக்தியே பிரமாணம். அவ்வறிவு நிகழ்ச்சியே பிரமிதி. ஆன்மா சத்தையும் அறியும், அசத்தையும் அறியும். ஆன்மாவிற்கு அறிவு சத்தாலும் விளங்கும் அசத்தாலும் விளங்கும். ஆன்மா அசத்தால் விளங்கி, அசத்தையும் அறியுங்கால், அசத்தின்பால் அசத்தாய் நிற்பதும் உண்டு. சத்தால் விளங்கிச் சத்தை அறியுங்கால், சத்தின்பால் சத்தாய் நிற்பதும் உண்டு. இவ்வாறு ஈரிடத்தும் நிற்பினும் ஆன்மாவிற்குக் கேடு உண்டாகாது. அசத்தால் விளங்கும் இடத்து, ஆன்மாவிற்கு வேருய் நின்று விளக்கும் உதவியாயிருப்பவை மூன்று. அம் மூன்றும் முறையே காட்சி (பிரத்தியட்சம்) கருதல் (அநுமாநம்) உரை (ஆகமம்) எனப்படும். அவை அசத்தாகிய பாசஞானம்; ஆன்மாவிற்கு வியஞ்சகங்களாம். சத்தால் விளங்கும் இடத்து அந்நியம் இன்றி, ஆன்மாவிற்கு ஆதாரமாய் உடன்நின்று விளக்கும் சிவஞானமே வியஞ்சகமாம். அக்காரணத்தால், காட்சி முதலிய மூன்றும் சிவஞானமும் பிரமாணம் என்று உபசரித்துக் கூறப்படும். இவ்வாறு உணராமல், வியஞ்சகங்களையே பிரமாணம் என்பர் தார்க்கிகர் முதலியோர். அவர் கொள்கைகள் பொருந்தாமையும் அவ் வியஞ்சகங்களால் நிகழும் பிரமதி பேதங்களும், அவற்றின் இயல்புகளும் பௌட்கர முதலிய சிவாகமங்களிற் பெரிது விரிந் துள்ளன. (சிவஞான போதம் சூ. எ. உரைகள்) இவ்வாறு அளந்துணர்ந்தனர் தொண்டர்.

## தெளிந்து தேறல்

மேற்கூறியவாறு, ஆன்மாவால் அறியப்படும் சத்து, சிவம் ஒன்றே. அறியும் ஆன்மா பிரமாதா. அறியப்படும் சிவம் பிரமேயம். ஆன்ம ஞானம் சிவஞானம் என்னும் இரண்டனுள்,



முன்னது பின்னதன் நிலையை அடைந்தால்தான் சிவம் விளங்கும். சிவஞானமே பிரமாணம். சிவஞான நிகழ்ச்சியே பிரமிதி. இவ்வாறு அத்தவப் பெருந்தொண்டர் தெளிந்து தேறினர்.

## பேராவியற்கைப்பேறு.

சலியாத முயற்சியாலும், அம்முயற்சியின் முடிந்த பெருந் தவத்தாலும், பல்கலை வல்ல பூரணஞானத்தாலும், பிரமாணங் களால் பிரமேயங்களை அளந்து கொண்ட உறுதியாலும், அவ் வுறுதியின் எய்திய தெளிவாலும் இதுவே செம்பொருள் எனச் சிறப்பை உணர்ந்து, தெளிந்து பேதமையின் விளைவாகிய பிறப்பு (பேரும் செயற்கை) ஒழிந்து, அகில லோகமாகிய அருளம்பலத்தில் அயராத – ஆராத – அகன் அமர்ந்த அன்பினராய் இறைஞ்சிப் பேராத இயற்கையைப் பெற்றனர் நற்றவர்.

## யான்பெற்ற இன்பம்

தெய்வப் புலியூர் வைதிகக் கூத்தா, அத்தொண்டர் அப் பேரா இயற்கையைப் பெறப் பட்டபாடுகளுக்கு எல்லை உண்டோ? 'நானே' ஒரு பாடும் பட்டிலேன். எனக்குச் சரியையும் தெரியாது. கிரியையும் புரியாது. யோகமும் ஆகாது. ஞானமும் அணுகாது. ஏரல் எழுத்தைப்போல, உன் சிற்றம்பலப் பெருங்காட்சி, 'என்னை' அறியாமலே 'எனக்கு' வாய்த்தது. வாய்த்ததால், அந்த நற்றவத்தோர் பெற்ற பேரா இயற்கையை 'யானும்' பெற்றேன். அவர்க்கும் 'எனக்கும்' கிடைத்தபேறு ஒன்றே. அது பெற அவர் பட்டபாடோ அளவிலாதது. அஃது என் குறிக்கோளாக இல்லாதொழிந்தும், 'என்னை' ஒழியாது எய்திற்று.

## எடுத்துக்காட்டு

தொண்டர் பொன்னிறத்தை உடைய் புறுவைப் போல்வர். 'நான்' ஒரு கருங்காக்கை. தில்லைப் பொன்னம்பல சந்நிதியோ மன்னுமாலிமயப் பொன்னுருவாமலை. அப்பொன்னுலா மலையில் அப்பொன்னிறப் புறுவும் இக்கருநிறக் காக்கையும்

சேர்ந்தன. இருநிறப் பறவைக்கும் ஒருநிறமே அன்றி வேறு நிறம் தெரியுமோ? பொன்னிறப் புருவானது பொன்மலை அடைந்து பொன்னோடு பொன்னாயிருந்தது. அதற்குச் சாட்சி வேண்டா. கருநிறக் காக்கை அங்குச் சேர்ந்து பொன்னாய் இருந்தது என்றால் நம்புவாரோ? அதற்குச் சாட்சி வேண்டுமோ? (குமரகுருபர முனிவரர் நேரே சென்று, கண்டு சொன்னதாயினும் காணாதார் காணாதாரே. நம்பமாட்டார். அப்பரம்பரையில் திகழும் ஸ்ரீ காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் பலமுறை சென்று சென்று, கண்டு கண்டு, பேரின்பக் களிப்பென்னும் கடலில் திளைக்கின்றார்கள்.) அதற்கும் சாட்சி வேண்டும் என்பர் அவநம்பிக்கை வடிவாயிருக்கும் அன்பர். அவர்க்குக் காணாதே பாடுங்கவிகளில் சான்று காட்டுதல் வேண்டுவதே. அதற்காக, புகழுடல் பெற்று ஒளிரும் தமிழ்த் தெய்வம் 'காய்சின ஆனை வளரும் கனகமலை அருகே போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்னிறமே' என்று அரசர் அருள்வாக்கையும், 'பனிமாலிமயம் பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாய் இருக்கும்' என்று புலவர் பொன்மொழியையும் காட்டும் சாட்சி ஆயிற்று. கருங் காக்கைக்குப் பொலிவு இராது. அதனால் பொல்லாக் காக்கை எனப்பட்டது. பொல்லாதது – பொலிவில்லாதது. பொல் + அம் = பொலம் பொலிவுடையது. பொலிவுடைய (பொன்) மலையைச் சார்ந்தது; பொல்லாததும் பொலிவுற்றது. அவ் வெடுத்துக்காட்டால் தொண்டரும் யானும் பெற்றபேறு வேறுபடாமை இனிது விளங்கும். தெய்வப் புலியூர் வைதிகக் கூத்தர் திருவருள் பழுத்த ஒருவருஞ் சந்நிதியில் சேர்ந்து வணங்கிப் பெற்ற பேறு ஒரே பேறுதான். சிறிதும் வேறுபாடில்லை. காரணம் உண்டு. இதில் கூறல் அரிது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் முதலிய சிலர் இளமையில் சிவமாயினர். பலர் முதுமையிலும் சிவமாதல் அரிதாயிற்று. அதற்கு உற்ற காரணமே இதற்கும். 'ஒருவனை செய்யாதோரும் உடையர் இவ்வுலகத்துள்ளே' என்னும் சித்தியால் நம் புத்திக்கு ஒரு தெளிவுண்டாகும்.

(தொடர்ச்சி மறுபக்கம் பார்க்க)

# நாவுக்கரசும் நமச்சிவாயமும்

பேராசிரியர் திரு. G. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M. A., B. L.
அண்ணமலை நகர்

மலர் 5, இதழ் 5-ன் தொடர்ச்சி

துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும், இடரினுந் தளரினும், நலம் தீங்கிலும் திருவாளன் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தைக் கரைந்துருகிக் கருத்திலிருத்தி, நாத்தழும்பேறக் காலையும் மாலையும் ஓதி வந்தால், அவ்வைந்தெழுத்தும் நமக்கு நற்றுணையாய் உற்றுழி யுதவி, நாம் நடுங்க வருவதொரு நலிவு மெய்தாமல், சிவப்பேற்றை அடையலாம் என்பது திண்ணம். இத்திருவைந் தெழுத்தையே புணையாகக்கொண்டு மனிதரில் தலையான மனிதராய் மன்னி வாழ்ந்து, தமக்கு இயைந்த இடர்களையெல்லாம் எள்ளியெறிந்து, எம்பெருமான் கழல் எய்தினர் திருநாவுக்கரசர். அவர் தமக்கு எல்லா ஞானமும் கல்வியுமாய் நின்றது இவ்வைந்தெழுத்துமே என்று, நீற்றறையை

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

சலியாது முயன்ற தவப்பெருந் தொண்டர்
பலநா ளோதிக் கலைமுற்று நிரம்பி
அளவையி னளந்துகொண் டுத்தியிற் றெளிந்து
செம்பொரு ளிதுவெனத் தேறி யம்பலத்
தாரா வன்பினே டகனமர்ந் திறைஞ்சிப்
பேரா வியற்கை பெற்றனர் யானே
சரியையிற் சரியாது கிரியையிற் றளரா
தியோகத் துணங்கா தொண்பொரு டுக்காது
வறிதே நின்றிரு மன்ற நோக்கிப்
பிறவா நன்னெறி பெற்றன னன்றே

இங்ஙனம்

இடம்:- ஞானகாசம் }
காலம்:- காலாதீதம் }

அருளுடைய
குமரகுருபர முனிவன்

இறைவன் திருவடி நீழலாக்கி அங்கு வீற்றிருந்து வீறுப்புடன் முழங்கினர். ஐந்தெழுத்தின் ஆற்றலை அனுபவவாயிலாக அப்பர் அருளிச்செய்ததை அன்பன் ஆர்வமொடு கேட்டான். நமச்சிவாயத்தைப் பத்தியொடு ஓதுவார்க்கு ஒரு துன்பமும் வாராதுதான். ஆனால், ஒரு நெறிய மனம் வைத்து உணர்ந்து ஓதுவதுதானே நமக்கு முடியாதிருக்கிறது!

நம்முடைய எண்ணங்கள், ஆசைகள், பந்தங்கள், பற்றுக்கள் எல்லாம் வீட்டினுள்ளேயே (பேரின்ப வீடல்ல) சுற்றிக் கிடக்கின்றன. தந்தையென்றும், தாய் என்றும், மனைவி மக்களென்றும் நம்மைப் பெருக வளைந்து கிடக்கும் சுற்றமே துணையாகக் கொண்டு, அவர்களைக் காப்பதுவே நமது கடமையாகக் கண்டு, அதிலேயே கருத்தூன்றிக் கவலைப்பட்டுக் கிடக்கும் நாம், நமச்சிவாயத்தைச் சிந்திப்பதற்கே நேரம் இல்லை என்கிறோம். முதலில், நம்முடைய உண்மை நிலையையாவது உணர்ந்து கொண்டோமா? பெற்றோர்களிடத்திலே நமக்குப் பாசம் எவ்வாறு பிறந்தது? நமது பிள்ளைகளிடத்திலே நமது மனம் உருகிப் பாயக் காரணம் என்ன? நாம் இந்தப்பிறவி எடுக்குமுன் எங்கிருந்தோம்? இங்கு எவ்வாறு வந்தோம்? ஏன் வந்தோம்? எப்படி வந்தோம்? இங்கு எத்தனை காலம் இருப்போம்? எப்பொழுது போவோம்? எப்படிப் போவோம்? எங்குப் போவோம்? இந்த உலகத்திலே இவ்வாறு வருவதற்கு நமது தாய் தந்தையர் தாம் உண்மையான காரணமா? அல்லது நாமே நம்மைப் படைத்துக்கொண்டோமா? இந்தப் பிறவிக்கு முன் எத்தனை பிறவி எடுத்தோம்? எத்தனை தாய் தந்தையர் நமக்கு வந்து போயினர்? நாம் இவ்வாறு பிறந்து இப்படி வளர்ந்து இந்த நிலை எய்துவோம் என்பது நமது பெற்றோர்களுக்குத் தெரியுமா? அவர்கள் எண்ணிச்செய்த காரியமா இது? அவர்கள் எண்ணியபடி ஏதாவது நடந்திருக்கிறதா? நமது பிள்ளைகளிடத்திலே நாம் அன்பு செலுத்துகிறோமே, இவர்கள் நமக்கு எப்படிப் பிறந்தார்கள்? இவர்கள் பிறக்குமுன் நாம் இவர்களைப்பற்றிக் கவலைப்பட்டோமா? இவர்களை நிலையாக வைத்துக்கொள்ளும் ஆற்றல் நமக்கு இருக்கின்றதா? நம்முடைய நிலையே நிலையற்றிருக்கும்போது, இவர்களை நிலைபெறுத்துவது எவ்வாறு?



நிலையில்லாத இவ்வுலகிலே நிலையில்லாத வாழ்க்கையையுடைய ஒவ்வோர் உயிரும், அதேபோல் நிலையில்லாத வாழ்க்கையையுடைய மற்றோர் உயிரைத் தாய் என்று பற்றிக்கொண்டு, தன் மனைவி அல்லது கணவன் என்று இடையிலே வந்த இன்னுமோர் உயிரைக் கைப்பிடித்துக்கூடி, அக்கூட்டத்தில் தோன்றிய நிலையில்லாத மற்றோர் உயிரைத் தன் குழந்தையாகக் கொண்டு கூத்தாடி, நீர்க்குமிழிபோல் 'டப்' என்று வெடித்துத் தப்பி விடுகிறது. ஓர் உயிர் உலகில் வந்து பிறப்பதற்கு முன்னும் ஒரே இருட்டு; வந்து நீங்கிய பின்னும் ஒரே இருட்டு. இதற்கிடையிலே வாழ்கின்ற வாழ்வில் தந்தை, தாய், தநயன் என்று நாம் ஒருவரையொருவர் தப்பாக எண்ணித் தலைதருக்கித் தள்ளாடித் தளர்ந்து விழுகிறோம். இவற்றுக்கெல்லாம் ஆதி காரணமாய் அனைத்துயிர்க்கும் பெற்ற தாய் தந்தையாய், கற்ற நூற் கருத்துமாய், சுற்றமும் தோன்றாத் துணையுமாய் நிற்கிற கடவுளையும் அவன் திருப்பெயரையும் மறந்து விடுகிறோம். 'நீ யாருடைய பிள்ளை?' என்று ஒருவனைக் கேட்டால், 'நான் கடவுளுடைய பிள்ளை' என்று அவன் கூறுவதுதான் உண்மைக்குப் பொருத்தமானது. ஆனால் அதை அவன் அறியாதவனாய், உலகியலுக்கு ஒப்ப, தன் உடலைப்பெற்ற ஒரு பெண்ணைத் தாய் என்றும், அவளால் காட்டப்படுபவனைத் தந்தை என்றும் கூறி விடுகிறான். அறியாமையால் அவன் அவ்விதம் கூறும்பொழுதே தனது உண்மையான அம்மையப்பனை, அதாவது ஆண்டவனை, மறந்து விடுகிறான். இதுவே ஒவ்வோர் உயிரினுடைய செயலுமாய் இருக்கிறது.

ஒரு பெண்ணுக்குத் தெரியுமா தன் வயிற்றில் எப்படிக் குழந்தை உண்டாகிறது என்று? ஒரு பையன் தாயிடம் சென்று 'நான் எப்படிப் பிறந்தேன்?' என்று கேட்டால், 'நீ எப்படிப் பிறந்தாய் என்று நான் எங்ஙனே அறிவேன்? சோதிடர்கள் பெண் குழந்தைதான் பிறக்கப்போகிறது என்று சொன்னார்கள். கடைசியில் பார்த்தால், நீ வந்து குதித்தாய்.' என்று சொல்வாள். இப்படியாக, வயிற்றிலிருப்பது ஆணா, பெண்ணா, மூடமா, மூங்கையா என்றுகூட தாய்க்குத் தெரியாது. மருத்துவர்களுக்கும் கருவிலே உயிர் எவ்வாறு வந்து நுழைகிறது என்பது

தெரியாது. யாராலும் அறிய முடியாது. பெண்ணுக்கே தெரியாமல் வித்தைத்தூவி விடுகிறன் ஈசன். அவள் அதை அழிக்கவேண்டுமென்று முயன்றாலும்கூட முடியாமற் போய் விடும். வயிற்றுக்குள் பத்துமாதம் வைத்து உருவாக்கி வெளியே கொண்டு வருகிறன் ஈசன். கருப்பம் முதிர்ந்து குழந்தை பிறப்பது மண்பாண்டங்களை வெந்து எடுப்பது போன்றதுதான். தாயின் வயிறு பானைகளை சுட்டு எடுக்கும் சூளைதான். இதனைத் திருமூலர் கூறுகிறர் :—

"இன்புற் றிருந்தவர் இசைவித்து வைத்தமண்
துன்பக் கலசம் அணைவான் ஒருவனே
ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே."

தாயின் உதரத்திலே, அவளுடைய உதிரத்திலே வளர்ந்தது குழந்தையின் உடல் மட்டுந்தான். தாயின் உயிருக்கும் குழந்தையின் உயிருக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. தம்பதிகளுக்குள்ளே இன்பம் போன்றதொரு விளையாட்டைக் காட்டி அதிலே அவர்களின் அறிவை மயக்கி இறைவன் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்கிறன். குழந்தை பிறந்தவுடனே தாய்க்கு அதனிடத்தே அளவு கடந்த பேரன்பு திடீரென்று உதயமாகிறது. பாலும் சுரந்து விடுகிறது. இதற்கெல்லாம் தாயா காரணம்? சிருஷ்டியிலே ஈடுபட்ட இறைவனின் திருவருள் விளையாட்டல்லவா?

"அருளல்ல தில்லை யரனவ னன்றி
அருளில்லை யாதலி னலோர் உயிர்க்குத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே."

என்பது திருமூலர் பாடல். இவ்வுண்மை மனித இனத்திற்கு மட்டுமல்ல. ஏனை விலங்கு பறவைகளும் இவ்வாறே தமது குட்டிகளையும் குஞ்சுகளையும் காதலித்துக் காத்து வளர்க்கின்றன. அவை பெரியனவாய் வளர்ந்தபின் விட்டுவிடுகின்றன. இறைவன் இவ்வையத்தில் உயிர்களைப் பெருக்கி வளர்த்திடும் முறை விந்தையிலும் விந்தையானது. குயிற் பறவை தன்து முட்டையைக் காக்கையின் கூட்டிலே திருட்டுத்தனமாய்ப் போட்டு விடுகிறது. அதனைக் காகம் தனது முட்டை என்றே நம்பி அடைகாத்துக் குஞ்சு பொரிக்கிறது. முட்டை உடைந்து குயிலின் குஞ்சு வெளிவரும்போது, காக்கை காகா என்றல் குஞ்சு கூகூ என்று கத்துகிறது. அடாடா! ஏமாந்து போனேமே! என்று காகம் அதைக் கொத்தப்போகும்போது குயிற்குஞ்சு ஓடிவிடுகிறது. இதுபோலவே ஒரு மணமான பெண்ணின் வயிற்றிலே முன்பின் தொடர்பில்லாத ஓர் உயிரைக் கருவிலே புகுத்து விடுகிறன் இறைவன். அவள் கணவன் இதற்குப் பொறுப்பாளியாக்கப் படுகிறன். அப்பெண் அதினின்றும் தப்பவழியில்லாமல், பத்து மாதமும் தாங்கிச் சுமந்து, தனக்கே உரியதாக பாவித்து அன்பு செலுத்திக் கருவுயிர்த்துக் காப்பாற்றிச் சீராட்டி வளர்த்து விடுகிறள். இருந்தாலும் அது அவள் குழந்தை ஆகிவிடுமா? குழந்தை தாயைப் போலவே இருக்கிறது என்றுகூட இருப்பவர் கூறுகின்றனர். 'மூக்கும் முழியும் அதன் அப்பனையே உரித்து வைத்திருக்கிறது.' என்று ஊரார் உரைக்கின்றனர். இது வெல்லாம் அச்சின் விசேடமேயன்றி அங்கு அதிசயிக்க ஒன்று மில்லை. இதுவெல்லாம் வெறும்மாயை. வயது வந்த மகன் வேருகும்பொழுது, "மகனே! உன்னை என் மகன் என்று எண்ணிப்பெற்று வளர்த்ததற்கு ஒரு கற்குழவியையாவது பெற்றிருக்கலாமே. ஒரு கருங்காலி உலக்கையைப் பெற்றாலும் நெல் குத்த உதவுமே" எனப் புலம்புகிற தாயின் கண்களும் மாயையினால் அன்றோ மறைக்கப்பட்டுள்ளது! இதோ திருமூலர் பாடல் :—

"குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைதன் கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே."

இஃது உண்மையில் ஒரு பெரிய மயக்கமேயாகும். தந்தைக்கும் குழந்தையைப்பற்றி, அது எத்தகைய குழந்தை, எங்கிருந்து வந்தது, என்னவாகப் போகிறது என்று ஒன்றும் தெரியாது. அதைக் கருவேற்றுக் காவித்திரியும் தாய்க்கும் ஒன்றும் உண்மை தெரியாது. அதனைப்படைத்த பிரமனுக்கும் படைத்ததைத் தவிர

வேறு ஒன்றும் தெரியாது. உண்மையை அறிபவன் ஈசன் ஒருவனே. மாயையின் திருக்கிலேயே பெற்றோர்கள் பிள்ளைப் பாசம் பிடித்துத் திரிகின்றனர் என்கிறார் திருமூலர் ,—

" இட்டார் அறிந்திலர் ஏற்றவர் கண்டிலர்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன்அம் மாயையின் கீழ்மையெவ் வாறே."

ஆனால் இறைவன் கருவிலே உயிரைச் சும்மா விடவில்லை. தன்னுடைய அழியாதநாமத்தைக் குழந்தை வடிவத்திலே நன்றாகப் பொருந்தும்படி அமைத்து விடுகிறான். தன் பெயர் முத்திரையைக் குழந்தை உருவத்திலே நன்றாகப் பொறித்து விடுகிறான். நமசிவய என்னும் சின்னத்தைக் கருவிலேயே கரைத்துக் கலந்து விடுகிறான். அதன் பாதத்திலே நகாரமும், வயிற்றிலே மகாரமும், தோளிலே சிகாரமும், முகத்திலே வகாரமும், முடியிலே யகாரமும் அச்சுப்போட்டது போல் அமைந்து விடுகிறது. குழந்தை அம்மையினுடையதும் இல்லை, அப்பாவினுடையதும் இல்லை, ஆண்டவனுடையது என்பது போதர, நமச்சிவாயம் தீட்டப் பட்டே குழந்தை பிறக்கிறது. இது தெரியாத ஈன்றாளும் அவள் கணவனும் தாங்களே குழந்தையின் தாய் தந்தையர் என்று பெருமைப்பட்டுக் கொள்கின்றனர். ஒருவன் தன் சொந்த முத்திரை (Trade mark) போட்டு உண்டு பண்ணிய சரக்கை மற்றொருவன் தன் சரக்காகப் புறத்தே போலி முத்திரை போட்டு வியாபாரம் நடத்துவது போன்ற செய்திதான் இது :—

" கண்ணுதல் நாமம் கலந்துடம் பாயிடப்
பண்ணுதல் செய்து பசுபாசம் நீக்கிட
எண்ணிய வேதம் இசைத்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே."

என்ற திருமூலர் திருமந்திரம் இதனை நன்கு புலப்படுத்தும். இது குழந்தையின் உடலிலே விழுந்த முத்திரை. குழந்தையின் உயிரிலும் நமச்சிவாய முத்திரை கிடக்கிறது. எப்படி? அகரமும் உகரமும் உருவாயிருக்கிற யகாரமாகிய ஆன்மாவிடத்திலே பரமசிவன் சிவயநம என்னும் பஞ்சாக்கரமே திருமேனியாகக்



கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத்தக்கதாகத் திருநடம் செய்கின்றான் என்பதை உண்மை விளக்கம் என்னும் நூல் உணர்த்துகின்றது :-

" எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்."

இப்பிரபஞ்சத்திலே தோன்றிய சர்வ சீவராசிகளும் ஈசனுடைய பிள்ளைகள் என்பது தோன்றத் தங்கள் தங்கள் உடம்பிலும் உயிரிலும் இறைவன் திருநாமமாகிய பஞ்சாக்கரத்தை முத்திரைப் பெயராகத் தரித்துக்கொண்டிருக்கின்றன என்பது மேலே கூறியவற்றால் இனிது விளங்கும். பஞ்சாக்கரம் ஐம்பூதங்களிலும் பரந்து நிற்பதை நாம் முன்னரே கண்டிருக்கிறோம். எனவே, இப்படைப்பில் தோன்றிய சடப்பொருள்களிலும் இறைவனுடைய பெயர் விலாசம் இலாஞ்சனையாக முத்திரிக்கப்பட்டுள்ளது, எல்லாம் அவனுடைய உடைமைகளாதலால். இவற்றை உணர்ந்தே,—

" குற்றம்நீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்தும்நீ அருத்தமின்பம் என்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் னுரைப்பதென்மு கம்மனே."

என்று திருஞான சம்பந்தப் பெருமானும்,

" முன்னே யுரைத்தால் முகமனே யொக்குமிம் மூவுலகுக்(கு)
அன்னையும் அத்தனு மாவாய் அழல்வணா நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென் னாவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெறுயெம் பிரானுன்னை வேண்டியதே."

என்று ஆளுடைய அடிகளும் பாடினர் என்க.

இங்ஙனம் நமக்கு அப்பனும் அம்மையுமாயுள்ள ஆண்டவன் பெயரை மறந்து எம்மாடு சும்மாடாய்ச் சந்தையிற் கூட்டமாய் நம்மைச் சுற்றிக் கிடக்கும் சுற்றத் தொடர்பைச் சதமென வாழ்தல் நல்லதாகுமா? நமது அப்பனுடைய திருப்பெயரைக்

கூறி வாழ்த்தி அவனைத் தொழுதல் நமது முதற் கடமையல்லவா? அவ்வாறு ஏத்தித் தொழுதால் வீட்டின்பம் எளிதிற் கிட்டுவது திண்ணம் அல்லவா? இங்குக் குறித்த கருத்துக்கள் திணிந்த அப்பர் பாடல் :—

" தந்தை யார்தாய் யார்உடன் பிறந்தார்
தாரம்ஆர் புத்திரர்ஆர் தாந்தாம் ஆரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமாம் இதற்கேதும் மகிழ வேண்டாம்
சிந்தையீர் உமக்கொன்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவும் திளைக்கும் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சி வாய
என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே."

உலகில் தந்தை என்றும் தாய் என்றும் நாம் சொல்லித் திரியும் அவர்களெல்லாம் நம் உறவினர்கள் அல்லர். அவர்களை நம் துணை என்று கருதி வாழ்வது மாயையின் மயக்கு. நமக்கு உண்மைத் தந்தையார் சிவபெருமான். ஆதலால் அவரை 'எந்தையார்' என்று அப்பர் கூறுகிறார். இவ்வாறு நமது உண்மை அப்பரை அப்பரடிகள் அழகுறக்காட்டிப் பெயரும் குறிப்பிடுவது அறிந்து போற்றற்பாலது. நீங்கள் இதனை ஆராய வேண்டும் என்னும் கருத்தால் 'சிந்தையீர்! என்று கூவுகின்றார்.

இந்த மாயையின் மயக்கு வந்து தம்மை மறைத்துவிடக் கூடாதே என்று அப்பர் அஞ்சினார். அதற்கு இடம் கொடுக்காதவாறு சிவபெருமான் திருவடிகளைச் சிக்கெனப் பிடித்து வணங்கினார். பிற தெய்வங்களின் வழிபாட்டை நீக்கினார். நாவிலே நமச்சிவாயத்தை மறவாது மாற்றாது தரித்துக் கொண்டார். சிவனடி நீழலின்பத்தை இம்மண்ணுலக வாழ்விலேயே அடைந்து அருள் வாழ்க்கை எய்தினார் :—

" மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவில்
மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின்
ஏற்றேன் பிறதெய்வம் எண்ணு நாயேன்
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்



மேற்றான்நீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே யிடங்கொடுத்து நாளும் நாளும்
ஆற்றேன் அடியேனை அஞ்சே லென்றாய்
ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே."

இவ்விதம் உணர்தற்கரிதாயினும் ஓதற்கெளியதாய திருவைந் தெழுத்தையும், அம்மந்திரத்தின் உட்பொருளையும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே ஞானகுருநாதனாய்த் தோற்றி யருளி உபதேசிக்கக் கேட்ட உத்தமர்களின் வழிவழித் தோன்றல் களாய், சைவ வுலகைக் கரையேற்றக் கையுதவும் திருப்பெரு மடாலயங்களின் தலைவர்களும் ஞானவான்களுமே தீக்கை வாயிலாகப் போதிப்பதற்கு உரியராவர். அன்னார் குருபாதம் போற்றிக் குரு வணக்கம் செய்து, சிவ விளக்கம் பெற்றுச் சிவநேசச் செல்வர்கள் உய்யுமாறு, கறைமிடறும் பிறை முடியு முடைய இறையடியை மனமார வழுத்துகின்றேன். நமச்சிவாயம்.

" பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சம் கலைமறந்தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே.

முற்றும்.



## திருவாரூரில்
## கமலை வெள்ளியம்பலவாணர் நினைவு
## முதுமொழிமேல் வைப்புப் பரிசு
### சேமவைப்பு ரூ. 3500/—

கமலை என்ற திருவாரூரிற் பிறந்தவரும், தருமபுரவாதீனத்து நான்காவது குரவராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகளிடத்தில் சைவ சந்நியாசம் பெற்றவரும், ஸ்ரீ காசியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளிடத்தில் கல்வி பயின்று தென்மொழி வடமொழிக் கடல்களைக் கரைகண்டுணர்ந்தவரும், தருமையாதீனத்து ஐந்தாவது மகாசந்நிதானம் ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக சுவாகளிடம் ஞானதீக்கை பெற்றவரும், திருநெல்வேலி சிந்துபூந்துறையில் தங்கியிருந்தகாலத்தில் கற்பனைக் களஞ்சியம் எனப் போற்றப்பெறும் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளுக்கு இலக்கணக் கல்வி நிரம்பச் செய்தவரும், கந்த புராணச் சுருக்கம் இயற்றிய சம்பந்த சரணாலய சுவாமிகள் முதலானவர்களுக்குப் போதகாசிரியராகத் திகழ்ந்தவரும், தருமையாதீன முதற்குரவராகிய குருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த 'முத்தி நிச்சயம்' எனும் பண்டார சாத்திரத்துக்குப் பேருரை ஒன்றும் சிற்றுரை ஒன்றும் அருளிச் செய்தவரும், சைவ சமய சந்தானாசாரியருள் ஒருவராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் அருளிய 'சிவஞான சித்தியார்' எனும் சைவ சித்தாந்த சாத்திரத்துக்கு 'ஞானாவரண விளக்கம்' எனும் பாஷ்யம் இயற்றியவரும், நீதிகளை விளக்கும் வரலாறு முன்னும் அதற்கியைந்த திருக்குறளைப் பின்னும் அமைத்துப் பாடப் பெற்றதும் – அறம்பொருள் இன்பங்களை விளக்கும் நீதிகட்குத் திருக்குறளும், வீட்டின் பகுதியை விளக்கச் சைவ சமய சந்தானாசாரியருள் ஒருவராகிய உமாபதிசிவாசாரிய சுவாமிகள் அருளிய சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றாகிய திருவருட் பயனும் அமைக்கப்பெற்றதும் – இனிய எளிய 196 வெண்பாக்கள் கொண்டதும் ஆகிய முதுமொழிமேல் வைப்பு என்னும் நூலை



அருளியவரும், சிதம்பரத்தில் சிவப்பேறு அடைந்தவருமாகிய கமலை வெள்ளியம்பலவாண முனிவரை நினைவு கூர்தற் பொருட்டும், அவர் அருளிய முதுமொழிமேல் வைப்பினை மாணவர் கசடறக்கற்று அதற்குத்தக நின்று நல்வாழ்வு பெறுதற் பொருட்டும், திருப்பனந்நாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இப்பரிசு நிறுவப்பெற்றது. இது "திருவாரூரில் கமலை வெள்ளியம்பலவாண முனிவர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு" எனப்பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3500/- (ரூபா மூவாயிரத்தைந்நூறு) இத்தொகை நூற்றுக்கு ஆண்டொன்றுக்கு ரூ. 3/- வீதம் வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்பெறும். (3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946) இது திருவாரூர் நகராட்சி மன்றத்தினரின் பரிபாலனத்தில் இருக்கும்.

3. அம்முதற் பொருளினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகை ரூ. 105/- இவ்வட்டித் தொகையினின்று ரூ. 95/- பரிசாக அளிக்கப் பயன்படுத்த வேண்டும். எஞ்சிய தொகையைப் பரிசுத் தேர்வு நடத்துதல் பரிசளிப்புவிழா முதலிய செலவுகளுக்குத் தொகையிருப்பின் பயன்படுத்தலாம்.

4. பரிசுக்குரிய கட்டுப்பாடுகளாவன :—

அ. திருவாரூர் நகர ஆட்சி எல்லைக்குட்பட்ட உயர்நிலைக் கல்விக் கூடங்களில் 4, 5, 6, பாரங்களில் படிக்கும் மாணவர்க்கு ஆண், பெண், சாதி, மத, குல வேறுபாடின்றிப் பரிசுகள் வழங்கப்பெறும்.

ஆ. பரிசுகளுக்குப் போட்டியிடுபவர் கமலை வெள்ளியம்பலவாண முனிவர் அருளிச்செய்த முதுமொழி வைப்பு எனும் நூலில் 98 வெண்பாக்களை மனப்பாடஞ் செய்தல் வேண்டும்.

இ. ஆங்கிலயாண்டில் ஒற்றைப்படை எண் உள்ள ஆண்டில் முதுமொழிமேல் வைப்பு எனும் நூலில் ஒற்றைப்படை

எண் உள்ள பாடல்களும், ஆங்கில ஆண்டில் இரட்டைப்படை எண் உள்ள ஆண்டில் இரட்டைப்படை எண் உள்ள பாடல்களும் இப்பரிசுப் போட்டிக்குப் பாடமாகும்.

ஈ. பரிசுக்குரிய தேர்வு இரண்டு பிரிவுகளுடையது. ஒன்று எழுத்துத் தேர்வு, 50 கூறுகள், இரண்டு மணி நேரம், முதுமொழிமேல் வைப்பில் போட்டிக்கென்று அமைக்கப்பெற்ற 98 வெண்பாக்களிற்கண்ட பொருளைப்பற்றியும், சொற்சுவை, பொருட்சுவை, குறித்தும் வினவப்பெறும். இரண்டாவது வாய்மொழித் தேர்வு, 50 கூறுகள். அந்த 98 வெண்பாக்களில் தேர்வுக் குழுவினர் கேட்கும் எல்லாப் பாடல்களையும் மனப்பாடமாகச் சொற்பொருள் விளங்கும் வண்ணம் ஒப்பிக்க வேண்டும்.

உ. இப்பரிசுக்குரிய மனப்பாடத் தேர்வினை நடத்த ஒரு தேர்வுக்குழு அமைக்கப்பெறும். திருவாரூர் நகராட்சி மன்றத் தலைவரும், பரிசுத் தேர்வுக்கு விண்ணப்பிக்கும் மாணவர் கற்கும் உயர்நிலைக் கல்விக்கூடத்துத் தலைமையாசிரியர் அல்லது அவர்களால் அனுப்பப்பெறும் தமிழாசிரியரும், இத்தேர்வுக்குழுவின் உறுப்பினராவர். தருமையாதீனத்துக்குச் சொந்தமான திருவாரூர் ராஜாங்கக் கட்டளை விசாரணையிலிருக்கும் ஸ்ரீமத் சுவாமிகள் அவர்களும் இக்குழுவில் ஒருவராக ஏற்றுக்கொள்ளப் பெறவேண்டும். திருவாரூர் நகராட்சி மன்றத் தலைவரே இத் தேர்வுக்குழுவின் தலைவரும் ஆவர். இவரே தேர்வு முடிவுகளை வெளிப்படுத்துவர். இத்தேர்வுக்குழுத் தலைவர் தீர்ப்பே முடிவானது.

ஊ. பரிசுக்குப் போட்டியிடும் மாணவர் தம் விண்ணப்பங்களைத் தத்தம் தலைமையாசிரியர் வழியாக ஆண்டுதோறும் ஜூலைத் திங்கள் 31-ம் நாளுக்குள் திருவாரூர் நகர மன்றத் தலைவருக்கு அனுப்புதல் வேண்டும். பரிசுக்குரிய தேர்வுகள் டிசம்பர்த் திங்களில் தேர்வுக் குழுத்தலைவர் குறிப்பிடும் ஓரிடத்தில் நடைபெறும்.



எ. பரிசுத் தேர்வில் முதற் கூறு பெற்றவர்க்கு முதற் பரிசு ரூ. 40/– (ரூபா நாற்பது), இரண்டாவது கூறு பெற்றவர்க்கு இரண்டாவது பரிசு ரூ. 30/- (ரூபா முப்பது) மூன்றாவது கூறு பெற்றவர்க்கு மூன்றாவது பரிசு ரூ. 25/– (ரூபா இருபத்தைந்து) ஆக மூன்று பரிசுகள் அளிக்கப்பெறும்.

ஏ. ஒரு முறை பரிசு பெற்றவர் மறு முறை பரிசு பெறற் குரியரல்லர்.

5. இக்கட்டளையை ஏற்படுத்தியவர்களால் முன் நிறுவப் பெற்றுத் திருவாரூரில் ஆண்டுதோறும் நடத்தப்பெற்றுவரும் மூவர் தேவாரப்பரிசு முதலியன அளிக்கப்பெறும் நாளில் இப் பரிசுகளும் அளிக்கப்பெறல் வேண்டும்.

6. பரிசுகள் அளித்தல், தேர்வு நடத்துதல் ஆகிய இவற்றுக்குச் செலவாகும் தொகை அந்த ஆண்டில் வரும் வட்டித் தொகைக்கு உள்ளாகவே இருத்தல் வேண்டும்.

7. முதலீடு செய்யப்பெற்றுள்ள இம்முதற்பொருள் தவணை முடிந்து திரும்ப அளிக்கப்பெற்றால் உயர்ந்த வட்டி தரக் கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யவேண்டும்.

8. ஆண்டுதோறும் வரவு செலவுக் கணக்கையும், பரிசுத் தொகை பெற்றவர் விளக்கம் ஆகியவற்றையும், பரிசு அளிக்காத ஆண்டில் பின் 9-வது பிரிவில் கூறியவாறு திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரன் சங்கத்துக்குத் தொகை அனுப்பிய விவரமும் இக்கட்டளை நிறுவியவர்கட்கும் அவர்கட்குப் பின் உரிமை உள்ளவர்கட்கும் அனுப்பி வரவேண்டும்.

9. இவ்வறத்தை வேறு எம்முறையிலும் பயன்படுத்துதல் கூடாது. எந்த ஆண்டேனும் பரிசுத் தேர்வு நடத்தாவிடில் அந்த ஆண்டுக்குரிய பரிசுத் தொகை ரூ. 95/– (ரூபா தொண்ணூற்றைந்து) ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரன் சங்கத்துத் தலைவர் அத்தொகையைக் கொண்டு ஸ்ரீவைகுண்டத்திலுள்ள குமர குருபரன் கலைக்கோவில் – நூல் நிலையத்திற்குத் தமிழ் நூல்கள்

வாங்கி நூல் நிலையத்தில் சேர்த்த செய்தியை இந்த அறத்தை ஏற்படுத்தியவர்கட்கும் அவர்களுக்குப் பின்வரும் உரிமை உள்ளவர்கட்கும் தெரிவித்துக்கொள்ளவேண்டும்.

குறிப்பு :- திருவாரூர் நகர மன்றம் 1954-ம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 15-ம் நாள் நடந்த கூட்டத்தில் தீர்மான எண் 1338-ன் படிக்கு இந்நிதியை ஏற்று நடத்த ஒப்புறுதியளித்தது. முதற்பொருள் ரூ. 3500/- திருவாரூர் நகராட்சி ஆணையர் அவர்கட்கு குடந்தை இம்பீரியல் பாங்கு BZ / 108-30896 எண்ணுள்ள உண்டியல் மூலம் அனுப்பி ஏற்றுக் கொள்ளப்பெற்றது.

Tirupanandal **15—3—1954.** (Sd) *Kasivasi Arulnandi Tambiran*



Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 16—3—1954 as No. 15/54. Book No. 4, volume 45, pages 175 to 177

# பரிபாடல் (17) செவ்வேள்

திரு. K. M. வேங்கடராமையா அவர்கள், M. A, B. O. L., பனசை.



## ஆசிரியர்

செவ்வேளுக்குரியதாகிய 17-ம் பரிபாடல் இயற்றியவர் நல்லழிசியார் என்ற புலவர். நல்லழுசியார் என்றும் இப்பெயர்க்குப் பிரதிபேதம் உண்டு. இவர் வையைக்குரியதாகிய 16-ஆம் பரிபாடலையும் இயற்றியுள்ளார்.

## பொது

இப்பாடலில் மதுரை 'பாடல் சான்று பல்புகழ் முற்றிய கூடல்' (வரி 22), 'கொய்யுளை மான் தேர்க் கொடித் தேரான் கூடல்' (வரி 45) என்றும், சூரிய மண்டிலம் 'தேயா மண்டிலம்' (வரி 32) என்றும், வையையாறு 'தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையை' (வரி 49) என்றும் குறிக்கப் பெற்றுள்ளன.

## கடம்ப மர வழிபாடு (1-8)

பல அன்பர்கள் நாடோறும் மாலையில் செவ்வேள் எழுந்தருளியிருக்கும் கடம்பினை வழிபட வருவர். அவர்கள் மலர்களையும், குழைகளையும், பூந்துகில்களையும், மணியினையும், வேலினையும் சுமந்து வருவர். உடன் வருவார் தீபத்தையும், இசைக்கருவிகளையும், சந்தனம் முதலிய வாசனைப்பொருள்களையும், அகிற்புகையையும், கொடிகளையும் கொண்டு வருவர். வழிபடுவோர் சந்தனத்தைத் தெளித்து, (வேலன் அரைக்கண்ணே விடையைக் கட்டின பூசையையுடைய கடிமரமாகிய) கடம்ப மரத்தை உரையாலே எத்துவர்; ஆலாபனம் செய்து பாடுவர்.

இங்ஙனம் நாடோறும் வழிபடுவோர் திருப்பரங்குன்றத்து அடியின்கண் உறைவர். இவ்வன்பர்கள் தேவர் உலகத்து உறைதலையும் வேண்டார்.

**திருப்பரங்குன்றத்தின் சிறப்பு** (9–21)

திருப்பரங்குன்றத்தின் ஒருசார், பாணர்களது யாழ் இன் தீங்குரல் எழ, அதன் எதிர் யாணர் வண்டின் இன்னிசை எழும்.

ஒரு பால் வேய்ங்குழலின் ஒலியெழ, அதன் எதிர் பண்ணார் தும்பி முரலும்.

ஒரு புறம் மண்ணார் முழவின் இசை எழ, அதன் எதிர் அண்ணல் நெடுவரை அருவி நீர் ஒலிக்கும்.

ஒரு பக்கம் பாடல்நல் விறலியர் அசைய, அவர் எதிர் வாடையினுல் பூங்கொடிகள் அசையும்.

ஒரு திறம் பாடினி முரலும் பாலைப் பண் நிறை குறையோடு ஒலிக்க, அதன் எதிர் ஆடுசீர் மஞ்ஞையின் அரித்தெழும் குரல் எழும்.

இங்ஙனம் கல்விகளால் வென்றிபெற எண்ணியவர்கள் மாறுமாருக எழுந்தாற் போன்ற தன்மையைச் செவ்வேளின் திருப்பரங்குன்றம் உடையது.

> "மாறுமாறு உற்றனபோல் மாறெதிர் கோடல்
> மாறட்டான் குன்றம் உடைத்து."

**நணித்தாயினும் சேய்த்து!** (22–27)

'பாடல் சான்று பல்புகழ் முற்றிய' கூடலுக்கும் திருப்பரங் குன்றத்திற்கும் இடைநின்ற இடம் மிகவும் அணித்து; ஆயினும் மகளிரும் மைந்தரும் நெருங்கி விளையாடுதலால் மிகச் சேய்த்து ஆகா நின்றது. மகிழ்ச்சி மிக்க அம்மகளிரது கூந்தலினின்றும் மைந்தரின் குஞ்சியினின்றும் வீழ்ந்து அவிழ்ந்த மாலைகளால் தடுக்கப்பெற்று இயங்கு நெறி இல்லையாயிற்று.



**இமையாரும் இமைப்பர்!** (29–32)

புகழால் திசையெங்கும் பரவிய திருப்பரங்குன்றின்கண் மேவி, உலகத்தார் பலவிடத்தும் செய்கின்ற பூசையில், செவ்வேள் ஆவியாக ஏற்றுக்கொள்ளும் அகிற்புகை மேலே போதலால் தேவர்களும் இமைப்பர்! சூரியமண்டிலமும் தோன்ருமல் மறையும்.

**அனைய பரங்குன்றின் அணி** (33–41)

ஈர மாலை இயல் அணியார்–வளை முன்கை வணங்கிறையார் ஆகிய மகளிரும், அவர் அணைமென் தோளின்கண் தங்கி அன்பு ஒத்தார்–தார் மார்பின் தகையியலார் ஆகிய மைந்தரும் மனம் மகிழ்தூங்கிப் பாய்ந்தாடுதலால் வண்டுகள் வெருவிச் சுனைமலர்த் தாதினை ஊதப்பெரு. திருப்பரங்குன்றினது அலங்காரம் அத் தன்மைய!

மலைக்கண் வார் வெள்ளருவி ஆறுதை பரந்து உழவாது வயலின்கண் பாக்கும். அவ்வருவியில் விளையாடு மகளிர் இயங்கு தலால் அவர் பூணினின்றும் விழுந்த நீலமணி உழுநிலத்தைச் சிதைக்கும்.

**தடுமாற்றம் நன்று** (42–46)

பிரிந்த தலைவர் வினைமுடித்துக் கடிதின் வந்து கூடுதற்கு வெள்ளருவி யணிந்த திருப்பரங்குன்றின்கண் தலைவியர் தெய்வ விழாச் செய்வர். அங்ஙனம் கூடியவழிச் சிலர் (கெடாத விழுப் புகழ் உடைய வளங்கெழு) வையையின்கண் விருந்தயர்வர்; அதாவது அத்தலைவரோடு புதுப்புனல் ஆடுவர். ஏனையோர் கூடற்கண் விருந்தயர்வர். இங்ஙனம் தெய்வ விழாவும் விருந் தயர்தலுமாகிய இவை திருப்பரங்குன்றிற்கும், வையைக்கும், மதுரைக்கும் தடுமாறி வருதல் இல்லற நெறியாதலின் நல்லொழுக்கம் ஆயிற்று.

Bleed through.

**வாழ்த்து** (48–53)

"மணி நிற மஞ்ஞையினையும், உயர்ந்த கோழிக் கொடியினையும், பிணிமுகத்தை யூர்ந்து செய்யப்பெற்ற வெல் போரினையும் உடைய தலைவ! மக்கள் மாட்டுப் பணி மொழியை யொழிந்து, நின் புகழையே ஏத்தி நின் அணி நெடுங்குன்றத்தைப் பாடித் தொழுகின்றேம். 'பிறவித் துன்பம் நீங்கிய இன்பம் மலிந்த நாட்களை யாம் பெறுக' என்று யாமும் எம் சுற்றத்தாரும் வேண்டிக் கொள்கிறேம். அருள் புரிக!"

"மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!
பணி யொரீஇ நின்புகழ் ஏத்தி
அணி நெடுங் குன்றம் பாடுதும்! தொழுதும்!
அவை, யாமும்எம் சுற்றமும் பரவுதும்!
ஏம வைகல் பெறுகயாம் எனவே."



# SILASRI ADI KUMARAGURUPARA SWAMIGAL MEMORIAL FEEDING CHARITY AT RAMESWARAM

## Endowment Rs. 3,500/-

This Endowment is founded by **Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal** of Sri Kasimutt, Tirupanandal, in memory of and with great reverence to Silasri Adi Kumaragurupara Swamigal, Founder of Sri Kumaraswami Mutt at Benares, for the purpose of conducting feeding charity at Rameswaram during the month of Adi. This endowment is styled "Silasri Adi Kumaragurupara Swamigal Memorial feeding charity at Rameswaram."

2. This endowment consists of Goverment Promissory Notes to the face value of Rs. 3500/- (Rs. Three thousand five hundred only) invested in 3% Conversion Loan of 1946 - G. P. Notes Nos. CA. 137033 for Rs. 2000/– CA. 135548 for Rs. 1000/– and CA. 135533 for Rs. 500/–. The administration of this endowment shall vest in the Donor and his successors-in-interest.

3. The annual interest accruing on the Government Promissory Notes shall be utilised for the performance of Brahmins Feeding and Maheswara Pooja (Saivate Feeding) in our choultry at Rameswaram in addition to usual daily feeding during the month of Adi every year (From 16th July to 16th August).

4. The feeding shall be in accordance with the Thitta Japtha prepared at the time of the celebration which depend upon the then current prices.

5. The charity shall be conducted by the Donor and his successors-in-interest. This endowment shall not be diverted to any purpose other than that intended by the Donor.

Tirupanandal,
**17—3—54.** (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 18—3—54, as No. 17 of 1954 of book 4, volume 45, pages 78 and 79.

# SILASRI
# ADI KUMARAGURUPARA SWAMIGAL
## MEMORIAL FEEDING CHARITY
## AT BENARES
**Endowment Rs. 7,000/-**

This Endowment is founded by Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal of Sri Kasimutt, Tirupanandal, in memory of and with great reverence to Silasri Adi Kumaragurupara Swamigal, Founder of Sri Kumaraswami Mutt at Benares, for the purpose of conducting feeding charity at Benares during the month of Ani. This endowment is styled "Silasri Adi Kumaragurupara Swamigal Memorial feeding charity at Benares."

2. This endowment consists of Goverment Promissory Notes to the face value of Rs. 7000/- (Rs. Seven thousand only) invested in 3% Conversion Loan of 1946 G. P. Notes Nos. CA. 136971 for Rs. 5000/- CA. 137034 for Rs. 2000/. The administration of this endowment shall vest in the Donor and his successors-in-interest.

3. The annual interest accruing on the Government Promissory Notes shall be utilised for the performance of Brahmins Feeding and Maheswara Pooja (Saivate Feeding) in our choultry at Benares in addition to usual daily feeding during the month of Ani every year (From 15th June to 15th July).

4. The feeding shall be in accordance with the Thitta Japtha prepared at the time of the celebration which depend upon the then current prices.

5. The charity shall be conducted by the Donor and his successors-in-interest. This endowment shall not be diverted to any purpose other than that intended by the Donor.

Tirupanandal, 17—3—54. (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 18—3—54 as No. 16 of 1954, of book 4, volume 45, pages 77 and 78.

# பேசாத பேச்சு (10)

(பத்ரிகாச்ரம யாத்திரைத் தொடர்ச்சி)

திரு. வி. கலியாணசுந்தரம் பிள்ளை அவர்கள், ஸ்ரீ காசி.

**கண்ணைப்பறிக்கும் காட்சி!**

எங்கு பார்த்தாலும் ஒரே வெண்மையான காட்சி! ஒளியின் முன் இருள் நில்லாதவாறு போல திருக்கேதாரத்திலே களங்கத்திற்கும், கருமைக்கும் இடமில்லை. மாலை வேளையில் கதிரவன் ஒளிபட்டு கண்கவர் வனப்புடன் பேரொளி வீசிக்கொண்டிருந்தன மலைச் சிகரங்கள்! என்ன தூய்மை! என்ன வெண்மை! இப்படிப்பட்ட தூவெள்ளைக் காட்சியை நாம் கண்டுகொண்டேயிருக்கலாமா? கண்ணைப்பறிக்கும் காட்சி என்பது இங்கே உண்மையானதாகும். உபசார வார்த்தையல்ல! கண் பறிபோய் விடும். நமது ஊனக்கண்களுக்கும் ஊனம் வந்துவிடும் என்பதில் ஐயமில்லை. ஆதலால் பச்சைநிறக் கண்ணாடி அணிந்துகொண்டு பார்க்க வேண்டும்.

**காலும் பறிபோகுமா?**

பனிக்கட்டியில் நடக்கும்போது ஒரு சிறு குளிர்காற்று வீசுகிறது. அது மனதுக்கு மிகவும் இன்பமளிப்பதாகும். களைப்பு அதிகம் தெரியாது. சிற்சில இடங்களில் கால் வழுக்கி விடுவதால் கீழே விழுந்துவிட நேரிடுகிறது. அப்படி விழுந்தாலும் அதுவும் ஒரு இன்பமே! ஆனால் பனிக்கட்டியில் நடக்கும்போது காலில் கம்பளி ஸாக்ஸ் அணிந்து அதற்குமேல் பூட்ஸ் அணிந்திருக்கவேண்டும். காலில் ஏதும் அணியாது வெறுங்காலுடன் நடந்தால் பனியில் காலிலுள்ள விரல்கள் மறத்துப்போய் இற்று

விழுந்துவிடுமாம். நமக்கு விரல் பறிபோன பின்தான் விவரம் தெரியும். மறத்துப்போவதால் வலி ஏதும் தெரியாது. ஆதலால் அதுவும் கவனத்துக்கு உரியதாகும்.

**உடல் நடுங்கிற்று.**

திடீரென காற்று ஒன்று வீசியது. எங்கிருந்தோ பனி மேகம் ஓடிவந்தது. எங்கே செல்கிருய்? நில்! உனது கள்ளச் சிந்தைக்கு வெள்ளை முலாம் பூசுகிறேன்—என்று கூறுவதுபோல என்மேலெல்லாம் வெண்பனி பொழிந்து கொண்டிருந்தது. என்னுல் குளிர் பொறுக்க முடியவில்லை. விரைந்தோடி வரவும் இயலாது. மெதுவாக தங்குமிடத்தை நாடிச் சென்றேன். உடலெல்லாம் குளிர் பொறுக்காது நடுக்கமெடுக்க ஆரம்பித்தது.

**சூக்கும சரீரம்**

தங்குமிடத்துக்கு வந்த நான் கணப்புச் சட்டியில் கையையும் காலையும் காய்ச்சி சிறிது சூடு உண்டாக்கிக்கொண்டேன். பிறகு அங்கிருந்த கம்பளிக் குவியலிலிருந்து இரண்டு கனமான கம்பளிகளை கீழே விரித்தேன். பெரியதொரு ரஜாய் என்னும் பஞ்சு மெத்தை, மேலும் இரண்டு கம்பளிகள்—இவைகளை மேலே போர்த்துக்கொண்டு கம்பளிப்போர்வைக்குள்ளே அடைக்கலம் புகுந்தேன். அப்போது என்னைச் சுற்றிக்கொண்டிருந்த கம்பளிகள் தூலசரீரம் போலவும், என் உடல் சூக்கும சரீரம் போலவும், தோன்றியது. சிறிது சுரநோய் கண்டிருப்பது தெரிந்தது.

**போர்வைக்குள்ளே!**

இதற்குள் என்னுடன் வந்தவர்கள் ஒவ்வொருவராக வந்து சேர்ந்தார்கள். ஒவ்வொருவராக கம்பளி வேட்டையாடிய பின் கம்பளிப் போர்வையைச் சுற்றிக்கொண்டு என்னிடம் வந்து ஒரு நிர்வாண சாது மௌனியாக இருக்கிருர். அவருடன் சுவாமிக ளவர்களும் இருக்கிருர்கள். அவசியம் போய் தரிசித்து வர வேண்டும். நாங்களெல்லாம் தரிசித்து வந்து விட்டோம். எங்களை அதிகநேரம் அங்கே தங்கவிடவில்லை, சாது



விரைவில் எங்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டார். சுவாமிக ளவர்களோடு மட்டும் ஏதேதோ பேசிக்கொண்டிருக்கிருர், என்ருர் ஒருவர். பேசவாவது—அவர்தான் மௌனியாயிற்றே! ஒரு சுண்ணும்புக் கட்டியினுல் பலகையில் எழுதிக்காட்டுகிருர் என்ருர் மற்றவர்.

**அதிசயம் நடந்தது!**

ஓர் ஆச்சரியமான சம்பவம் நடந்தது என்ருர் மேலும். என்ன ஆச்சரியமானது? பெரியபுதிர் போடுகிறீரே! விவரத்தை சொல்வதுதானே என்றேன். ஆனுல் என்னுல் எழுந்திருக்கவோ போர்வையின் அடியிலிருந்து விலகவோ இயலவில்லை. என்ன? உடல் நலமில்லையோ என்று கேட்டபடியே மெதுவாகப் போர்வையை விலக்கி என் கையைத் தொட்டுப் பார்த்தார். ஆம்! உடல் கொதிக்கிறது. சுரம் வந்திருக்கிறது போலும்— என்ருர். அதிருக்கட்டும் அதிசயம் என்னவென்று சொல்ல வில்லையே—என்றேன்.

**எப்படித் தெரிந்ததோ?**

சுவாமிகளவர்களும் சாதுவும் ஏதேதோ எழுதிக்காட்டி கருத்தைப் பரிமாறிக்கொண்டார்கள். அருட்பெருகு தனிக் கடலும் அன்புசெறி கடலும் ஒன்று சேர்ந்தது போல் தேஜஸ்வி யான இரு பெரும் தபோதனர்களை ஒருங்கே தரிசிக்கப் பெற்ருேம். அப்போது சாது சுவாமிகளவர்களை எந்த ஊர்? என்று எழுதிக் கேட்டனர். அவருக்கு தமிழ், இந்தி, ஆங்கிலம் தெரியும்போதும், தமிழ்தான் எழுதினுர்! அதற்கு சுவாமிகளவர்கள் பதில் ஏதும் கூறவில்லை. அவர்கள் முகத்தில் இயற்கையான புன்னகை மட்டுமே தவழ்ந்தது. உடனே சாது "திருப்பனந்தாள்" என்று எழுதிக் காட்டிவிட்டார். நாங்களெல்லாம் திகைத்துப்போனேம்! எப்படித் தெரிந்ததோ அவருக்கு? முடியுமானுல் அவசியம் போய் தரிசித்து வருவது நலம்—என எனக்கு ஆவலை எழுப்பினுர்.

**காசியும், உத்தர காசியும்**

அதிருக்கட்டும். இன்னும் என்னென்ன பேசினுர்கள் ஒன்றும் விடாமல் சொல்லுங்கள், என்றேன். பேசுவதுதான்

இல்லை என்றேனே! அவர்தான் மௌனியாயிற்றே—என்றார் ஒருவர்.—ஆமாம்! பேச்சல்ல—பேசாத பேச்சு—இது. என்ன நிகழ்ந்தது—என்பதைப்பற்றி கூறுங்களென்றேன். நாங்கள் அதிக நேரம் இருக்கவில்லையே! இருந்தவரை நடந்ததைக் கூறுகிறேன். தங்களனுபவத்தில் உத்தர கண்டத்தில் தவத்திற்கு ஏற்ற இடம் எது? என சுவாமிகளவர்கள் சாதுவைக் கேட்டார்கள். சாது "உத்தரகாசி" அல்லது "காசி" – என்று எழுதிக் காட்டினர்.

**உத்தரகாசி**

இங்கே உத்தரகாசி பற்றி சிறிது கூறிச் செல்கிறேன். உத்தரகாசி கங்கோத்ரிக்குச் செல்லும் பாதையில் கங்கைக் கரையில் அமைந்துள்ள இடமாகும். பெரிய ஊராக உள்ளது. இதற்கு வடகிழக்கில் உஜெயிலி என்ற இடத்தில் அநேக சாதுக்கள் தவச்சாலைகள் ஏற்படுத்திக்கொண்டுதங்கியுள்ளார்கள். சாதுக்களைத் தவிர வேறு யாரும் இந்த இடத்தில் இல்லை. அவர்களுக்கு உணவு முதலியன உத்தரகாசி காலாக்கம்பளிவாலா சத்திரத்தில் கொடுக்கப்பெறுகிறது. உணவு நேரத்துக்கு வந்து பெற்றுக்கொண்டு உஜெயிலி போய்விடுகிறார்கள். தபோவனம்ஜீ என்ற பெரியார் சுமார் 70 வயதுடையவர்; இங்கு பிரசித்தி பெற்றவர். இவர் வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த பேரறி-வாளர். ஆங்கிலமும் தெரிந்தவர். 10 தடவைக்கு மேல் பல்வேறு வழியாக கைலாய யாத்திரை செய்தவர். கிட்டத்தட்ட ஆறடி உயரமுள்ள ஆஜானுபாகுவான சரீரம். புன்னகை தவழும் முகம். நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தோம். கிருஷ்ணாச்ரமம் ஜீ—என்ற பெரியவர் நிர்வாண சாது—மௌனி. இன்னும் பல பெரியோர்கள் வசிக்கிறார்கள். (திருக்கேதாரத்தில் உத்தரகாசியைப்பற்றி கேள்வியுற்று உத்தரகாசிக்கு சுவாமிகளவர்களுடன் சென்றபோது இப்பெரியார்களை எல்லாம் சந்திக்க எனக்கு வாய்ப்பு ஏற்பட்டது)– ரிஷிகேஷத்திலிருந்து டெஹ்ரி வழியே தராசு வரை பஸ்மூலம் சென்று 18 மைல் நடந்தால் உத்தரகாசிக்கு போய்ச் சேரலாம்– உத்தர காசியில் மிகப்பழமையான விசுவநாதர் ஆலயமிருக்கிறது.



**கயிலாசபதிக்கு ஜே!**

இன்னும் என்ன நிகழ்ந்தது? என்றேன் என் ஆவலை அடக்கிக்கொண்டு. கயிலாய யாத்திரையைப் பற்றியும் ஏதோ குறிப்புகள் எழுதியதைப் பார்த்தோம். ஆனால் விவரங்கள் ஏதும் சொல்லத் தெரியவில்லை. இதற்குள் எங்களைப் போகும்படி சாது சைகை செய்ததால் நாங்கள் வந்து விட்டோம் என்று கூறினார்கள்.

**சந்தர்ப்பம் நழுவியது!**

எனக்கு சாதுவைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆவல் மிகப் பெருகியது. கிடைத்தற்கரிய இந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக்கொள்ள வேண்டாமா? ஆனால் போர்வைப் பந்தத்தினின்றும் வெளிவந்தாலன்றோ? இப்படித்தான் மனிதனுக்கு ஒரு சிறிது நல்லறிவு தோன்றினாலும், பாசபந்தமெனும் போர்வை மூடிக்கொண்டு அவனை வெளிவிடாது செய்துவிடும் போலும்! என எண்ணியபடியே காலத்தை வீணாக்கினேன். காலங்கடந்து விட்டது. சந்தர்ப்பம் நழுவிவிட்டது! தரிசனம் பேறு கிட்டவில்லை.

**சொல்லால் முழக்கில் சுகமில்லை!**

சுவாமிகளவர்களும், மௌன சாதுவும் என்னென்ன கருத்தை வெளியிட்டார்கள்? மௌனியாக இருப்பது ஏன்? என்றெல்லாம் எண்ணமிட்டேன். மனிதனின் கருத்தை வெளியிடுவதற்குப் பேச்சு மிகவும் இன்றியமையாதது. மனிதனுக்கு சிறப்பாக உடையது பேச்சும் அறிவும்தானே? ஆயினும் ஞானிகளுக்கு அப்பேச்சும் அடங்கவேண்டும்போலும்! "சும்மாயிரு சொல்லற" என்பது இதனால் தான் எழுந்ததோ? சகல கேவலமற்ற சுத்தத்திலே பேச்சுக்கு மூலகாரணமான ப்ரணவமாகிய நாதத்தினைக் கடந்து, உள்ளொளியாகிய ஆன்ம அறிவிலே நடனமிடும் சொற்பதங்கடந்த தொல்லோனாகிய இறைவனைக் காண விழைவார் வித்தகம் பேசியாத்திரிவார்? "சொல்லால் முழக்கில் சுகமில்லை மௌனியாய் சும்மாயிருக்க அருள்வாய்" என்று தானேயிருப்பார்கள்.

(தொடர்ச்சி மறுபக்கம் பார்க்க)

# திருவிடைமருதூரில் தைப்பூச அன்னம்பாலிப்பு நிதி ரூ. 5000/-

காவிரிக்குத் தென்பாலமைந்ததும், மூவர் தமிழ்மெய்ஞ் ஞானத் திருநெறித் தேவாரம் பெற்றதும், மத்தியார்ச்சுனம் எனப்பெறுவதும், மருது தல விருக்ஷமாக உடையதும், பட்டினத் தாரும், பத்திரகிரியரும் மருதவாணரைப் பூசித்து முறையே கீழைக் கோபுர வாயிலிலும் மேலைக்கோபுர வாயிலிலும் தங்கித் தவம் செய்த பெருமையுடையதும், பெரிய அன்பின் வரகுண தேவருக்கு நேர்ந்த பிரமகத்தி தோஷம் நீங்கப் பெற்றதும், பட்டினத்தடிகளால் மும்மணிக்கோவை பாடப்பெற்றதும் ஆகிய பல சிறப்புகள் பொருந்திய திருவிடைமருதூர் என்னும் சிவ க்ஷேத்திரத்தில், காவிரியின் ஐராவணத்துறையில் நீராட்டுச் சிறப்புக் கொண்டாடப்பெறும் தைப்பூசத் திருநாளில், ஏழை களுக்கு அன்னம்பாலித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது "திருவிடைமருதூரில் தைம்பூச அன்னம் பாலிப்பு" எனப்பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 5000/- (ரூபா ஐயாயிரம்) பெறுமானமுள்ள 3 சதவீதம் வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. 3% கன்வர்ஷன் லோன்

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**பேசாத பேச்சு**

பேசும் பேச்சையே பூரணமாக அறிந்துகொள்ளும் ஆற்றலில்லாத யான் அப்பேசாத பேச்சை அறிய நினைப்பது பேதமையல்லவா? அப்பேசாத பேச்சு என்றுவது அறியும் பேறு கிட்டுமா? அல்லது அது வாக்கிறந்த பூரணம் தானே?

(தொடரும்)



ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் நெ. சி. எ. 137067. இந்நிதி நம்மாலும் நமக்குப்பின் வரும் உரிமையுள்ளவர்களாலும் பரி பாலனம் செய்யப்பெற்றுவரும்.

3. இம்மூலதனத்தினின்று கிடைக்கும் வட்டித் தொகையைக் கொண்டு திருவிடைமருதூரில் ஆண்டுதோறும் தைப்பூசத் திருநாளில் ஏழைகளுக்கு அன்னம்பாலிப்பு நடத்தப் பெறும்.

4. ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி வருமானத்துக்கு ஏற்பவும் காலவிலைக்கு ஏற்பவும் நம்மாலும் நமக்குப்பின் உரிமை யுள்ளவர்களாலும் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம்பாலிப்பு நடைபெறும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப்பெற மாட்டாது. முதற்பொருள் அரசினரால் திரும்பியளிக்கப் பெறின் அதிக வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரங் களிலேயே திரும்பவும் முதலீடு செய்யப்பெறும்.

Tirupanandal<br>27—2—1954. } (Sd) *Kasivasi Arulnandi Tambiran*



---

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 1—3—1954 as No. 13 of 1954, book No. 4, volume 45 pages 71 to 72.

ஸ்ரீவைகுண்டம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில் மாடியில்

**30-5-54** ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் **6-30** மணிக்கு நடைபெற்ற

ஸ்ரீ குமரகுருபரன் சங்கம்

நிர்வாகக் குழுவினர் கூட்டத்தின் புரோசிடிங்ஸ்

## தீர்மானம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்வான் ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இச்சங்கத்துக்கு ரூ. **1000/-** (ரூபாய் ஆயிரம்) மூலதனம் கருணைபாலித்தருளி, ஷை மூலதனத்தின் வருஷ வட்டி வருமானத்திலிருந்து வழிபடு கடவுளாம் செந்திலாண்டவனுக்கு ஆண்டுதோறும் பங்குனி மூலத்தன்று உதயமார்த்தாண்டத்தில் பால், இளநீர், சந்தனம், பன்னீர், விபூதி அபிஷேக அலங்காரம் நைவேதனத்துடன் வழி பாடும், இளவரசு ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களின் ஷை திருநக்ஷத்திரத்தில் சகஸ்ரநாம அர்ச்சனையும் நடத்திவைக்க கட்டளையிட்டருளி, ஷை மூலதனத்தை பரிபாலிக்கும் உரிமையும் இங்சங்கத்திற்கு வழங்கி, ஷை மூலதனத்தை சர்க்கார் கடன் பத்திரத்தில் ஈடுசெய்து வைக்க உத்தரவாகியிருப்பதை வரவேற்று, இவ்வருட்பணியாற்றும் வாய்ப்பை நமக்கருளிய பெருங் கருணைக்கு இச் சங்கம் தன் நன்றியை ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் அவர்களுக்கும், ஸ்ரீலஸ்ரீ சின்ன எஜமான் சுவாமிகள் அவர்களுக்கும் வணக்கத்துடன் விண்ணப்பித்துக் கொள்கிறது.

The Saint Cheraman Perumal Hall and the Saint Sundaramurthy Nayanar Library
at Tiruvanchikulam, Cochin State.



**Founded by His Holiness**

**Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal**

**Kasi Mutt, Tirupanandal.**

## Library in Memory of
## Sri Cheraman Perumal and Saint
## Sundaramoorthy Nayanar
## at Tiruvanchikulam (Cochin)

# Capital Rs. 5000/-

A sum of Rs. 5000/- has been donated for the Construction of a library building at Tiruvanchikulam (Cochin) in memory of Sri Cheraman Perumal Nayanar and Saint Sundaramoorthy Nayanar subject to the following conditions, which have been accepted by the Cochin Devaswom Board.

1. A suitable site should be secured opposite to the temple at Tiruvanchikulam for construction of the building.

2. A decent buiding with a hall and a library should be constructed within one year from the date of grant.

3. The Library should be named "The Cherman Perumal and Sundaramoorthy Nayanar Library."

4. Accommodation should be provided in it for pilgrims from Tamil Nadu.

5. If the building is not constructed within one year from the date of grant, the amount should revert back to the Donor.



**Note:** The receipt of the cheque for Rs. 5000. has been acknowledged and the final approval of the grant and conditions conveyed in Trichur Devaswom Commissioner's letter No. A. 10 3605-51 dated 18-8-51.

# மருட்கை

புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனுர் அவர்கள்

அண்மையில் எம்மூர்க்கு அணித்தாக உள்ள ஒரு கிராமத்தின் கண் நிகழ்ந்த தமிழ்க்கழக ஆண்டு விழாவிற்குச் சென்றிருந்தேம். அவ்விழாவின்கண் சொற்பொழிவாற்றிய நண்பர்களுள் ஒருவர், இக்காலத்தே புதுவதாகத் தோன்றி உலகெங்கும் பரவி வருகின்ற பூதநூலறிவினையும், அதன் வியத்தகு சாதனைகளையும், பாரித்துப் பேசி நம்நாட்டினர் அப்புதிய அறிவினை ஆர்வத்துடன் வரவேற்று நன்கு பயின்று ஐரோப்பா அமெரிக்கா முதலிய மேலைநாட்டினரைப் போன்று முன்னேற்றம் பெறுதல் வேண்டும் என்றும், நாம் பகுத்தறிவோடு பொருந்தாத நம் பண்டைப் புராண முதலியவற்றில், நமது அருமந்த காலத்தைக் கழித்தல் கூடாதென்றும், மேலும் இக்கால விஞ்ஞான அறிவு நம் பண்டைக்காலத்துச் சான்றோருடைய, கடவுள், மறுபிறப்பு, கட்டு, வீடு என்பன போன்ற நம்பிக்கைகளைத் தளர்த்தி வருகின்றதென்றும், பகுத்தறிவோடு பொருந்தாத மூடநம்பகங்கள் நம்நாட்டில் மலிந்து கிடக்கின்றன என்றும், அவற்றைப் புறக்கணித்தொதுக்கிப் பயன் மிகவுடைய விஞ்ஞான அறிவினைப் பெருக்கிக்கோடலே நாம் எதிர் காலத்தே இன்புற்று வாழ ஏதுவாம் என்றும், இன்னோரன்ன முறையில் நீண்டதொரு சொற்பொழிவாற்றினர்.

அந்நண்பர் கூறியபடி, மிகப்பழைய காலத்தே விலங்குகளோடு விலங்காய்க் காட்டினூடே குகைகளில் வாழ்ந்த மக்கள், இன்று விண்ணளாவிய பன்னிலை மாடங்களில் வாழ்வதும், சிறகர் இல்லாதிருந்தும், வானிடை விரைந்து பறந்துபோதலும், பல்லாயிரங் காவதத் தொலைவின்கண் உள்ளாரோடு வானொலியின் வாயிலாய் நொடிப் பொழுதில் அளவளாவுதலும், நொடிப் பொழுதின்கண் எண்ணிறந்த மக்கள் வாழுமொரு கோநகரத்தை அழிக்கவல்லராதலும், விண்ணிலே சேய்மைக்கண் உள்ள செவ்வாய் மண்டில முதலிய அயல் மண்டிலங்கட்குச் செல்ல முயலுதலும், இன்னோரன்ன பிறவும் செய்யவல்லராதலை எண்ணுந்தோறும் அறிவுடையோர் வியப்படைவர் என்பது வாய்மையே. நாம் விரும்பினாலும்; விரும்பாவிட்டாலும் அப் புத்தறிவு உலகெலாம் பரவித் தனது நன்மை அல்லது தீமைகளைப் பயந்தே விடுதலும் தப்பாது. இப்புதிய பூதநூலறிவினைப் போற்றிப் புகழ்கின்ற அந்நண்பர் போன்றே, யாமும் அதனைப் போற்றுவோம். அவர் ஆ! ஆ!! என வாயங்காந்து வியக்குமாறு யாமும் வியப்போம். சிற்சில செவ்விகளில் வியப்பினால் நாம் மதிமயங்கி ஒன்றனை மதிக்குமளவிற்குமேல் மதித்தலும், மதித்தற்குரியவற்றை மதியாமல் விடுதலும் நம்மையறியாமலே செய்து விடுகின்றேம். மருட்கையின் இயல்பு அத்தகையது. புதுமையால் ஞெரேலென உண்டாகும் மருட்சியினால் மதி கெடாதிருக்கும் வன்மை, நுண்மாணுழைபுலமுடைய சான்றோர்க்கு மட்டுமே கைவந்ததாம். ஏனையோர் புதுமை மருட்சியில் மதிமயங்குதலே இயல்பாகும்.

முன்னர் நாம் கூறிய நண்பர், புதிய விஞ்ஞான அறிவின் சாதனைகளிலே—அவற்றின் புதிய ஆரவாரங்களிலே—மருண்டவராதல் வேண்டும். அங்ஙனம் மருண்டமையால், புதிய விஞ்ஞான அறிவு, நம் பழைய சான்றோர்களின் கடவுள் நம்பிக்கை முதலியவற்றை இக்காலத்தே தளர்த்தி வருகின்றதென்றும், நாம் இன்பமுற்று எதிர்காலத்தே வாழவேண்டுமாயின் இப்புதிய விஞ்ஞான அறிவினை வரவேற்றுப் பெருக்கிக்கோடல் வேண்டும் என்றும் மதிமைசாலா வறுமொழிகள் பலவும் வழங்கினர்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனர், தமது தொல்காப்பியத்தே மெய்ப்பாடு கூறுமிடத்து மருட்கை என்னும் மெய்ப்பாட்டிற்குப் பிறப்பிடம் கூறுவார்,

"புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே." (மெய்ப்-சூ 7)

"செந்தமிழ்ச்செல்வி" மார்ச் 54, பரல் 7-ல் உள்ள இக்கட்டுரை ஆசிரியரின் அனுமதிபெற்று பிரசுரிக்கப் பெற்றது.

என நுண்ணிதிற் சூத்திரம் செய்திருத்தலைக் கற்ற மேலவர் யாரும் உணர்வர். அதன்கண் மருட்கைக்குப் புதுமை பிறப்பிடமாகக் கூறியதோடன்றி, அம்மருட்கைதானும் "அறிவினை உலக வழக்கினுள் நின்றவாறு நில்லாமல் திரித்து வேறுபடுத்து வரும் இயல்பிற்றென்பார். "மதிமைசாலா மருட்கை" என நுண்ணிய அடைகொடுத் தோதியதும் ஈண்டு நினைவுகூர்ந்து மகிழற்பாலது. புதிய விஞ்ஞான அறிவின்கண் ஆற்றவும் மருட்கைகொண்ட இந்நண்பரின் சொற்கள் மதிமைசாலா மடமைச் சொற்களாதலை இனிச்சிறிது ஆராய்ந்து காட்டுதும்.

உலக மகா கவி என அறிஞர் எல்லாம் போற்றிய புலவர் பெருமகன் இரவீந்திர நாத தாகூர் என்பார், புதுவையிலிருந்த அரவிந்த அடிகளாரைப் பற்றி வரைந்த கட்டுரை யொன்றனில், "இக்காலத்தே மேலைநாட்டிற் றேன்றி வளர்ந்து வரும் பூதநூலறிவு நம்மைக் கடவுளின் கருப்பக் கிருகத்திற்கு அழைத்துச் செல்கின்றது," என நுண்ணிதின் வியந்துரைத்திருத்தலை யாம் ஓதியுள்ளேம். ஒப்பற்ற இவ்வறிஞர் பெருமானும், நம் நண்பர்போன்றே இப் பூதநூலறிவினை வியக்கின்றாருமினும், அவ்வியப்பு, அவர்தம் கூர்த்த அறிவினை நிலைதிரித்து மயக்கிவிடவில்லை. மயங்காமையோடன்றி அப்பூத நூலறிவின்கண்ணும், பிறர் அறிவிற்குத் தெற்றென விளங்காத பெருநன்மை ஒன்றுளதாதலை அப்பெருமகன் நுண்ணிதின் எடுத்துக்காட்டும் போதே அவருடைய நுண்மாண் நுழைபுலனின் கூர்மைகண்டு எற்றே இவர் திறம் என யாம் வியக்கவும் வியக்கின்றேம். இனி இப்பூத நூலறிவு நம்மைக் கடவுளின் கருப்பக் கிருகத்திற்கு அழைத்துச்செல்கின்றதென்னும் இப்பெரியார் சொல்லின் விளக்கம் யாதென இங்கு யாம் ஆராய வேண்டா. ஒரு பொருளைப்பற்றி இருவர் கொண்ட கருத்துக்கள் ஒன்றனை ஒன்று முரண்பட்டிருத்தல் மட்டும் யாம் இவ்விடத்து உணர்தல் போதியதாம்.

இனி, மனிதனுக்கு வெளிப்புறத்தே விரிந்து கிடக்கும் மண் முதலிய இப்பூதங்களின் இயல்புகளை நுண்ணிதின் ஆராய்வதாகிய இப்பூத நூலறிவு, மனிதனின் அகத்ததாகிய உயிர் இயல்பினையும், அவ் வுயிர்க்கும் அப்பாலாகிய இறையியல்பினையும், ஆராய்ந்து கண்ட நம் முன்னையோர் காட்சிகளை எவ்வாறு தவறுடையன என்று காட்ட வியலும்? ஒரு பொருளின் இயல்பினைத் தனித்தனி ஆராய்வாருடைய கொள்கைகள் தம்முள் முரண்படுமாயின் அவற்றுள் சரியானதொன்று, தவறான கொள்கையைப் பொய்ப்படுத்தல் இயல்பாம். இருவேறு பொருள்களைத் தனித்தனி ஆராய்வாருடைய ஆராய்ச்சி முடிவுகள், ஒன்றை ஒன்று முரண்படுவதெங்ஙனம்? அகக்கண் கொண்டு ஆராய்ந்து நம் பண்டைச் சான்றோர் தம் தெய்வீக உணர்ச்சி வன்மையாலே உணர்ந்து கூறிய கடவுளியல், உயிரியல் முதலியன அவ்வகக் காட்சித் துறையில் சிறிதும் கண்விழித்திராத பூதக்காட்சிப் புறவிழியாளரால் தளர்த்தப்படுகின்றன என்னும் கூற்றுப் பொருளில் வறுங் கூற்றேயாகும்.

இக்கால விஞ்ஞானத் திறவோர்களில் பலர் அகக் காட்சி அறிவினைப் பொதுமுறையினும் ஒரு சிறிதும் பெற்றிலாப் பெற்றியர், ஆதலை கூர்ந்துணர்வார் நன்குணரலாம். இனி இவர் தம் வியத்தகு சாதனைகள் தாமும், வெறும் ஆரவார நீர்மையுடையனவன்றி, உயிர் வேண்டும் இன்பத்தை அதற்கு நல்கும் ஆற்றலுடையனவும் ஆகமாட்டா. இவற்றைப் பரிந்து வளர்த்துக் கோடலால் மக்கள் இன்புற்றமர்ந்து வாழ்தல் கூடும் என எண்ணுவதும் மதிமைசாலா மருட்கையாலுண்டாய மடமையேயாகும். எற்றுலெனின், மெய்க்காட்சித் திறவோர்கள், மக்கள் எய்தும் துன்பத்திற்கெல்லாம் ஏதுவாவது அவர்தம் அகத் துறையும் பேராசையே ஆகலின், துன்பம் இல்லாது இன்புற்று வாழ எண்ணுவோர் எல்லாம், அப்பேராசை தூண்டியவழிப் புறப்பொருள்களின் நிகழும் பற்றினை ஒருவித் தமக்குத்தாமே அடங்கி அமைதல் வேண்டும் என நன்கு விளக்கிக் கூறியுள்ளனர்! அகக் காட்சித் திறவோருள் தலைசிறந்த நந் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்,

"அவா வில்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுண்டேல்
தவா அது மேன்மேல் வரும்," என்றும்,

"இன்பம் இடையறாது ஈண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்," என்றும்,

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு."

என்றும் ஓதியுள்ள, இப் பொன்மொழிகள் மனிதன் துன்புறுதற்குரிய காரணத்தையும், அவன் அத் துன்பத்தினின்றும் தப்பி உய்தற்குரிய வழியையும் மிகவும் நுணுக்கமாக விளக்குகின்றன. இன்பம் வேண்டும் என்றும், துன்பம் ஒழிகவென்றும் விரும்பும் ஒவ்வொரு மனிதனும் இப் பொன்மொழிகளை உளத்திற்கொண்டு அவைகூறும் வழியே ஒழுகுதல் வேண்டும். இவை உண்மை என்பதில் ஐயுறுவார் அறிவிலிகளன்றி வேறிலர். இந்நெறி மறுக்கவியலா உண்மை நெறியெனின், புதிய விஞ்ஞானத் திறவோர் சாதனைகள் மனிதர்க்கு இன்பம் தருந்தகுதியுடையன அல்லவென்பதும் உண்மையேயாகும். ஏனெனில் அச் சாதனைகள் அனைத்தும் மனிதனுடைய பேராசையை மிகுவிக்கும் சாதனமாவதல்லால் அவாவறுத்தற்கு உதவுவன அல்லவே.

இனி, இவ் விஞ்ஞானம் இக்காலத்தே செய்திருக்கும் சாதனைகள் அனைத்தும் மனிதர்கள் தொழில் செய்வதற்குரிய கருவிகளாந்துணையே அன்றிப் பிறிதில்லை. இவ்வுலகியல் வாழ்விற் கருவிகள் இன்பத்தை மட்டும் விளைப்பனவுமல்ல. யாதாமொரு சிறந்த கருவியும் அதனைக் கையாளும் கருத்தாவினது மனநினைவிற் கேற்ற பயனையே விளைவித்தல் இயல்பு. கருவி சிறந்ததாகும் பொழுது கருத்தாவின் மனநினைவு விரைவில் செயற்பட்டு அதன் பயனும் மிகுதியாகலாம். ஆகவே, நன்மை தீமைகள் செய்யும் கருத்தாவைப் பற்றியதாக இருப்பதன்றிக் கருவியைப்பற்றியன வாகாமை காணலாம். கருத்தா மனநலம் வாய்ந்தவனாயிருந்து அவன் நல்ல செயலைச் செய்யுங்கால் சிறந்த கருவி அவனுக்கு நன்மையை விளைவிக்க உறுதுணையாய் அமைந்து பெரிதும் நன்மை தருவதாகலாம். அதனைத் தீயவன் கையாளின் என்னும்! பண்டைநாட் சான்றோர் மக்களினத்திற்கு நன்மை விளைவிக்க வேண்டின் அவரை மனநலம் உடையராக்குதலே முதற் கடமையாம் எனக்கண்டு, அம்முயற்சியிலேயே பெரிதும் முயன்று வந்தனர் என்பதை, வரலாறுகளானும் நம் பண்டை நூல்களானும் உணரலாம். அம்முயற்சியின் பயனாக மக்கட் கூட்டம் சிறந்த பண்பாடு பெற்று உயர்ந்தும் வந்தது. இற்றை



நாள் இம் முயற்சியே பெரிதும் புறக்கணிக்கப்பட்டு வருகின்றது. கடவுள் நம்பிக்கை போன்றவைகளே மக்கள் மனத்துயரை மாற்ற வல்லன. இதனை,

"தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது."

என்னும் மெய்ம்மொழியானும் உணரலாம். பூதஞானம் மிக்குப் பெருகி உள்ள அமெரிக்கா முதலிய மேலைநாட்டின்கண் வாழும் மக்கள் எல்லாம் அவ்வறிவின் பயனாக இன்புற்றமர்ந்து கவலையின்றி வாழ்கின்றார்கள் என்று யாரே கூறவல்லார்! அந் நாட்டின்கண் ஆண்டுகள் தோறும் தமக்குற்ற மனக்கவலையை மாற்ற வழியறியாது அதனைத்தாங்கி வாழவும் பொறாது தூக்கிட்டுத் தற்கொலை செய்வார் தொகை பெருகி வருகின்றது என்னும் செய்தியையும் யாம் செய்தித் தாள்களிற் காண்கின்றோம். அணுக்குண்டு முதலிய கருவிகள் மாந்தர்க்கு இன்பம் விளைப்பது எவ்வாறான்? அண்மையில் நிகழ்ந்தபோர் காரணமாக, சப்பான் நாட்டில் மக்கள் வறுமையுற்றுக் கிழமை ஒன்றிற்கு நானூறுபேர் வீதம் தற்கொலை செய்து கொள்கின்றனர் என்று ஒரு செய்தித்தாள் கூறக்கண்டுள்ளோம். இங்ஙனமெல்லாம் ஆராய்ந்து காணுங்கால் இப்புத்தறிவு மக்கள் வாழ்க்கையில் இன்பத்தைச் சேர்க்கும் என்பது பொய்ம்மை என்றே தோன்றுகின்றது.

பண்டைநாள் உரோமாபுரியில், வாழ்ந்திருந்த ஞானமுனிவராகிய சாக்கிரட்டீசு என்பவரின் அடக்கமுடைமை கண்டு, அவரை உலகியலறியாதவர் என்றெண்ணிய சிலர், அந்நகரத்தே நிகழ்ந்த பொருட்காட்சிச் சாலைக்கு அழைத்துச் சென்று, ஆங்குள்ள வியத்தகு பொருள்களைக் காட்டினராம். அக்காட்சியில், அம் முனிவர் பெரிதும் வியப்படைந்திருப்பர் என்று கருதிய அவர்கள் பெரியீர்! இப்பொருள்களைப்பற்றித் தாங்கள் யாது கருதுகின்றீர்கள்? என்று வினவியபோது, அம்முனிவர் "அம்மம்ம! வியப்பு! வியப்பு!! இவ்வுலகில் எனக்கு வேண்டாத பொருள்கள் எத்துணை ஆயிரம் இருக்கின்றன" என்று மறுமொழி கூறினராம். சாக்கிரட்டீசின் இம் மறுமொழியின் கருத்து, உண்மையான

இன்ப நாட்டமுடைய மனிதனுக்கு இவ்வரிய ஆடம்பரப் பொருள்களுள் ஒன்றேனும் வேண்டற்பாற்றன்று என்பதே யாகும். இன்றும் இப்புதிய விஞ்ஞானக் கருவிகளைப்பற்றி யாரும் அவர் மெய்யுரையையே மீண்டும் கூறிக்கோடல் மிகை யன்று. உண்மையான மெய் வாழ்வு தலைப்படும் மனிதனுக்கு அவன் உடலோம்பிக்கொள்ள இறைவனால் அவனுக்கு அளிக்கப் பட்ட கால்கை முதலிய உறுப்புக்களே சாலும். இன்பத்தின் இயல் கண்டு—அதனை எய்தும் நெறிகண்டு—ஒழுகி அதனைப் பெற்று மகிழவோ எனில், நம் தெய்வப் புலமைத் திரு வள்ளுவனார் திருவாய்மலர்ந்தருளிய தெய்வத் திருக்குறளாகிய மெய்ந் நூலொன்றே அமையும். மற்று இப்புதிய விஞ்ஞானிகளின் கருவிகளில்—குண்டூசி முதல் அணுக்குண்டிறுதியாகக் கிடந்த வற்றுள்—யாதொன்றும் அந்நல்லோனுக்கு வே ண் ட வே வேண்டா.





# காஞ்சிபுரத்தில்
## கந்தபுராணப் பிரசங்க நிதி ரூ. 3500/—

ஸ்ரீமுருகப் பெருமானின் கருணைப் பெருக்கினை உலக மக்கள் எளிதிற் பெற்றுய்யுமாறு வாரிவாரி வழங்குவதும், மாந்தரைக் "கருக்கடல் முருக்கி முத்திக்கரை" தனில் சேர்க்க வல்லதும், பத்திச்சுவைநனி சொட்டச் சொட்ட அமைதியான ஆற்று நீரோட்டம்போன்று செந்தமிழ் நடையிலுள்ளதும், மெய் யடியார்களால் நாடோறும் பாராயணம் செய்யும் பனுவலாகத் திகழ்வதும், 'உரைப்போர் கேட்போர் முன்னெலாம் புரிந்தவினை அனைத்தும் தீர்த்து முத்தி' தரவல்லதும், "புராண நன்னாயகம்" என்று புகழப்பெறுவதும், 10345 பாடல்களைக் கொண்டதும், முருகப்பெருமானால் "திகட சக்கர" என்று அடியெடுத்துக் கொடுக்கப் பெற்றுக் கச்சியப்ப சிவாசாரியரால் அருளப் பெற்றதும், பொய்யடிமையில்லாத புலவர் குழாம் மகிழ்ந்து போற்றக் காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் "சகாத்தம் எழு நூற்றின் மேலாய்" அரங்கேற்றப் பெற்றதுமான கந்த புராணத்தைச் "சொற்றாரும் ஆராய்ந்திடுவாரும் தகவுற்றாமே கற்றாரும் கற்பான் முயல்வாரும் கசிந்து கேட்கல் உற்றாரும் வீடு நெறிப்பாலின் உறுவர்" ஆகலின் ஆறுமுக முடையவோர் அமலன் மாக்கதையாகிய கந்தபுராணத்தைக் காஞ்சிபுரம் குமரகோட் டத்தில் கந்த சட்டித் திருவிழா நாட்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்துவித்தும் கேட்பித்தும் மக்களை நற்பேறடைவித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது "காஞ்சிபுரத்தில் கந்தபுராணப் பிரசங்க நிதி" எனப்பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 3500/– (ரூபா மூவா யிரத்து ஐந்நூறு) ஆண்டொன்றுக்கு ரூ. 4/– வீதம் வட்டி தரக் கூடிய சர்க்கார் கடன்பத்திரமாக உள்ளது. (4% Madras Loan of 1963 Book Debt Certificate No. M. S. 471 of Madras)

இந்நிதி நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும்.

3. இம்மூலதனத்தினின்று கிடைக்கும் வட்டித் தொகையினின்று ஆண்டுதோறும் காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் கந்தசட்டித் திருவிழாவில் கந்தபுராணச் சொற்சொழிவுகள் நிகழ்த்த ரூ. 96/- (ரூபா தொண்ணூற்றாறு) செலவு செய்யப்பெறும். தபாற்செலவு முதலிய சில்லரைச் செலவுபோக எஞ்சிய தொகையைக் கொண்டு நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் காஞ்சிபுரம்குமரகோட்டத்துக் கந்தப்பெருமானுக்கு நிவேதனம் பொருள் படைத்துக் கந்தசட்டித் திருவிழாவில் பிரசங்கம் கேட்பவருக்குப் பயன்படுத்தப்பெறும்.

4. கந்தபுராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தக் கட்டுப்பாடுகளாவன:-

1. ஆண்டுதோறும் காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் கந்தசட்டித் திருவிழா ஆறு நாட்களிலும் கந்தபுராணச் சொற்பொழிவுகள் சைவ சீலமுள்ள பழுத்த தமிழ்ப் புலவர் ஒருவரால் நிகழ்த்தப்பெறும்.

2. ஷை புலவர் பல்கலைக் கழகத்து வித்துவான் அல்லது புலவர் தேர்வில் வெற்றிபெற்றவராகவும் அல்லது பி. ஏ. பி. ஓ. எல். முதலிய பட்டதாரிகளாகவும், சொல்வன்மையுடையவராகவும், சைவ சித்தாந்த சாத்திரப் பயிற்சி பெற்றுச் சைவ நல்லொழுக்கமும் உடையவராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடைய ஒருவர் ஆண்டுதோறும் நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் கந்தபுராணப் பிரசங்கம் செய்ய நியமிக்கப்பெறுவர்.

3. நியமனம் பெற்றவருடைய பெயரும் விலாசமும் காஞ்சிபுரம் குமரக்கோட்டத்து டிரஸ்டி அவர்களுக்கு உரிய காலத்தில் அறிவிக்கப்பெறும். ஷை டிரஸ்டி அவர்கள் ஷை சொற்பொழிவாளரைக்கொண்டு குமரகோட்டத்தில் கந்தசட்டித் திருவிழாவில் ஆறுநாட்களிலும் நாடோறும் மாலையில் சொற்பொழிவுகளை நிகழ்த்துவிக்க வேண்டும்.



4. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காண்டம் வீதம், ஆறு நாட்களும் கந்தபுராணத்து ஆறுகாண்டங்களிலுள்ள பொருளைச் சொற்பொழிவாளர் தெளிவாகக்கேட்போர் மனங்கொள்ளுமாறு பக்திப்பெருக்குடன் சொற்பெருக் காற்றவேண்டும். உசிதம் போல் சிறிது மாற்றியமைக்கச் சொற்பொழிவாளருக்கு உரிமையுண்டு.

5. மேற்குறித்தவாறு சொற்பொழிவுகள் ஆற்றியதற்கு அத்தாட்சியாகக் காஞ்சிபுரத்துக் குமரக்கோட்டத்து டிரஸ்டி அவர்களிடம் சான்றிதழ் பெற்று நமக்கும் நமக்குப் பின் உரிமை உள்ளவர்களுக்கும் ஷை சொற்பொழிவாளர் அனுப்பவேண்டும்.

6. கந்தசட்டி நாளில் நிகழ்த்தப்பெறும் ஆறுவது சொற்மொழிவு நிகழ்த்தி முடிந்ததும் (6 × 16 ஆக) ரூ. 96/- சன்மானமாகச் சொற்பொழிவாளருக்கு அளிக்கப்பெறும். வட்டி வருமானத்துக்கு ஏற்ப இத்தொகை கூட்டவும் குறைக்கவும் பெறும். இச்சன்மானத் தொகை பிரசங்க சன்மானம், பிரயாணச் செலவு, நித்தியப்படிச்செலவு முதலிய செலவினங்களையும் உட்கொண்டதாகும்.

7. மேற்குறித்த சன்மானத்தொகை கந்தசட்டித் திருவிழாத் தொடக்கத்திலேயே காஞ்சிபுரம் குமரகோட்டத்து டிரஸ்டி அவர்களுக்கு அனுப்பப்பெறும். அச்சன்மானத் தொகையைச் சொற்பொழிவாளருக்கு அளித்து இரசீது பெற்று நமக்கும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களுக்கும் ஷை டிரஸ்டி அவர்கள் அனுப்ப வேண்டும்.

8. நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் நியமிக்கப்பெற்று அனுப்பப்பெறும் சொற்பொழிவாளர் தவிர்க்க முடியாத காரணங்களால் சொற்பொழிவாற்றக் காஞ்சிபுரத்துக்குச் செல்லத் தவறினும், சொற்பொழிவாற்றுகையில் தவிர்க்கமுடியாத காரணங்களால் சொற்பொழிவாற்ற முடியாது போயினும் ஷை குமரகோட்டத்து டிரஸ்டி அவர்கள் தக்கவர் ஒருவரை உடனே நியமித்து இச்செய்தியை நமக்கும் நமக்குப்

பின்வரும் உரிமையுள்ளவர்களுக்கும் தெரிவித்து ஒப்புதல் பெற வேண்டும். இங்ஙனம் நியமிக்கப் பெற்றவருக்கு நாட் சொற்பொழிவுக்கு ரூ. 16/- (ரூபா பதினறு) வீதம் சன்மானம் அளித்தல் வேண்டும். இவரும் இப்பகுதிகளில் குறித்துள்ள கட்டுப்பாடுகளின்படியே நடந்துகொள்ளக் கடவர்.

9. ஒரு ஆண்டு சொற்பொழிவாளராக நியமிக்கப் பெற்றவர் மீண்டும் மூன்று ஆண்டுகள் வரை நியமிக்கப்பெறற் குரியரல்லர்

5. இத்தருமம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப் பெறமாட்டாது. நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் இக் கந்தபுராணப் பிரசங்க நிதி பரிபாலனஞ் செய்யப் பெற்றுவரும்.

**கந்தபெருமான் திருவருள் வாழ்க!**

Tirupananda] }
**26—1—1954.** } (Sd) *Kasivasi Arulnandi Tambiran*



Registered at Tiruvadamarudhur Sub-Registrar's Office on 27—1—54 as No. 5 of 1954 Book No. 4, volume 45, pages 56 to 59.

# அவளும் பொய் சொல்லாள்

**வித்வான் திரு. கு. நடேச கவுண்டர் அவர்கள், கோயம்புத்தூர்.**

தெய்வீகப் புலவர்களாகிய இரட்டையர்கள் **திருவா**மாத்தூர்க் கலம்பகம்பாடி அரங்கேற்றும்போது "**ஆற்குழையோ** அரவோ ஆயர்பாடி அரண்மனையோ, பாற்கடலோ **திங்களோ** தங்கும் ஆவம் பலபலவாம், மாற்கமும் ஆகி நின்றார் **மாதைநாதர்** வலங்கொள் பம்பை, மேற்கரை கோயில் கொண்டார் புரஞ் சீறியவெங் கணைக்கே" என்ற செய்யுளைக் கூறிப் பொருள் **விரிக்கையில்,** அரங்கிலுள்ளார், "புலவரே இச்செய்யுளில், **திருக்கோயில்** பம்பையாற்றின் மேற்குக் கரையில் இருப்பதாகக் **கூறியுள்ளீரே;** கிழக்குக் கரையில் அன்றோ இருக்கின்றது; **எல்லாரும்** கண்ணுற் கண்டுள்ளதைத் தவருகக் கூறியுள்ளீரே!" என்று தடை கூறினர். அதுகேட்ட புலவர் 'யாம் ஆற்றினையும் கோயிலினையும் நேரிற் கண்டபின் இக்கலம்பகம் பாடவில்லை; கலைமகள் **எம்** நாவினின்று கூறுவித்தபடியே கூறினேம். **யாமும் (உண்மை இன்னதென) அறியேம்; அவளும் (நாமகளும்) பொய் சொல்லாள்'.** எனக்கூறி அரங்கேற்றத்தை அன்றைக்கு அவ்வளவிலே **நிறுத்திக்** கொண்டு தம் தங்குமிடம் சென்றனர். அன்றிரவு **திடீரெனப்** பெருமழை பெய்து வெள்ளம் பெருகிப் **பம்பையாறு உடைப்** பெடுத்து, கோயிலுக்குக் கிழக்குப்பக்கமாக ஓடிற்று; **எனவே** கோயில், ஆற்றின் கிழக்குக் கரையிலிருப்பதுமாறி **மேற்குக்** கரையில் இருப்பதாயிற்று. காலையில் இவ்வியத்தகு **நிகழ்ச்சியைக்** கண்ட பெருமக்கள், இரட்டையரை அணுகி நிகழ்ந்ததைக் **கூறி** நூலைத்தொடர்ந்து அரங்கேற்றுமாறு **வேண்டிக்கொண்டனர்.** அரங்கேற்றம் இனிது நிறைவேறிற்று. **இரட்டையர்கள் கூறிய** 'யாமும் அறியேம் அவளும் பொய் சொல்லாள்' என்ற **கூற்று** ஒரு முதுமொழியாகி உலகில் வழங்கி வருகின்றது. **அதன்** பொருள்:— யாம் உண்மை இன்னதென நேரில் **அறிந்திலேம்;** எம் நாவினின்று சொல்விக்கும் நாமகளோ பொய்யைச் **சொல்ல**

மாட்டாள்; என்பதாம். இதன் கருத்து யாதெனில் நம் செயலற்று நானற்று நிற்கின்ற பெரியோர்கள் செயலெல்லாம் நாதன்தன் செயலேயாகும்; ஆதலால் அவர்தம் நாவினின்று வரும் சொற்கள் இறைவன் சொற்களேயாகும். அதனால் அவர் மொழி 'நிறைமொழி' யாகும் என்பதாம்.

இரட்டையர் வரலாற்றில் பிறிதொரு செய்தியும் இங்ஙனம் நிகழ்ந்ததாகக் கூறுவர். அஃதாவது :— அவர்கள் ஏகம்பநாதருலா இயற்றி அரங்கேற்றுகையில், காப்புச் செய்யுளில், ஆயிரக்கால் மண்டபத்தில் வீற்றிருக்கும் விகடசக்கர விநாயகரைப் போற்றியிருந்தனர். அந்நாளில் அத்தகை மண்டபமும் விநாயகரும் காஞ்சிபுரத்தில் இல்லையென, அரங்கிலிருந்தோர் மறுத்தனர். அரங்கேற்றம் தடைப்பட்டது; பின்னாளில் ஆயிரக்கால் மண்டபமும் விகடசக்கர விநாயகரும் வெளிப்படவே அரங்கேற்றம் இனிது நிறைவேறிற்றாம்.

நிறைமொழி மாந்தராகிய பெரியோர் கருத்தின்றிக் கூறும் சில சொற்களின் பொருளும் அவ்வாறே நிறைவேறிவிடும். இதற்குத் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் வரலாற்றில் ஒரு சான்று நினைவூட்டுதும். அப்பெரியார் சமணரோடு புனல்வாதம் நிகழ்த்துகையில், எழுதி வைகை நீரில் இட்ட ஏட்டின் திருப்பாட்டான

**" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்**
**வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக**
**ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே**
**சூழ்க வையகமும் துயர்தீர்கவே "**

என்ற திருப்பாசுரத்தில் "வேந்தனும் ஓங்குக" திருவாக்கின் ஆற்றலால் பாண்டியன்தன் கூன் நீங்கி நின்றசீர் நெடுமாறன் ஆன வரலாறு தமிழுலகும் நன்கறிந்ததே.

இவ்வாறு சான்றோர் வாக்கில் நின்று ஆக்கத்தை அருள் செய்யும் நாமகள் அல்லார் வாக்கில் நின்று அவர் அறியாமலே அழிவையும் சொல்விப்பதுண்டு. அதற்கோரெடுத்துக் காட்டுக் கூறுவாம்.

இலக்குவனால் ஒறுக்கப்பட்ட சூர்ப்பநகி இராவணனை அணுகி, சீதையைக் கவர்ந்து வரும்படி அவனைத் தூண்டுவதற்காகக்



கூறும் மொழியில் அவளை யறியாமலே, பின்னே நிகழ்வதற்குரிய அமங்கலப் பொருளை நாமகள் கூறுவிக்கின்றாள். வருமாறு.

**" இந்திரன் சசியைப் பெற்றான்; இருமூன்று வதனத்தோன்றல்**
**தந்தையும் உமையைப் பெற்றான்; தாமரைச் செங்கணானும்**
**செந்திரு மகளைப் பெற்றான்; சீதையை நீயும் பெற்றால்,**
**அந்தரம் பார்க்கில் நன்மை அவர்க்கில்லை உனக்கேயைய "**

என்ற செய்யுளில் 'இந்திரன், சிவன், திருமால் என்போர் முறையே சசி, உமை, திருமகள் என்ற அழகிய மாதரை மனைவியராகப் பெற்றனர். அதுபோல் உனக்கேற்ற மனைவியாக நீ சீதையைக் கொணர்ந்தால், அவரோடு உன்னிடை ஒப்புநோக்கின் அவர்க்குச் சிறப்பில்லை; உனக்கே உண்டு என்று கருதிக் கூறினாள். ஆனால் அவளை அறியாமலே நாமகள் அமங்கலத்தைக் கூறுவிக்கின்றாள். எங்ஙனம்?

" அந்தரம் பார்க்கில் நன்மை அவர்க்கு; இல்லை உனக்கு " = ஒப்புப் பார்க்கில் அவர்களுக்கு அதனால் நலம் உண்டு; உனக்கு நலம் இல்லை என்று பொருள் படுகின்றதன்றோ! பின்னும்

**" பாகத்தில் ஒருவன் வைத்தான்; பங்கயத் திருந்த பொன்னை**
**ஆகத்தில் ஒருவன் வைத்தான்; அந்தணன் நாவில் வைத்தான்;**
**மேகத்தில் பிறந்தமின்னை வென்ற நுண்ணிடையினாளை**
**மாகத் தோள்வீர பெற்றால் எங்ஙனம் வைத்து வாழ்தி "**

என்று கூறும்போது சிவன் முதலியோர் தத்தம் காதலியரை முறையே பாகத்திலும், மார்பிலும் நாவிலும் வைத்துச் சிறப்பித்தனர். அப்பெண்டிரினும் சிறந்த சீதையை நீ அடைந்தால் அவளை எந்த உயர்ந்த இடத்தில் வைத்துச் சிறப்பிப்பாய் என்று கருதிக் கூறினாள் சூர்ப்பநகி. ஆனால் "நீ எங்ஙனம் வைத்து வாழ்தி" = நீ எப்படி வைத்து வாழப் போகின்றனை; வாழமாட்டாய் என்றும் பொருள் படுகின்றது.

இனி, சான்றோர்கள் வாயினும் சிற்சில வேளைகளில் ஊழின் வலியால் அவர் அறியாமலே அமங்கலச் சொற்களை நாமகள் சொல்வித்தலும் உண்டு. தசரதன் இராமனுக்கு முடிசூட்டுதற்குரிய நாளை வினவுகின்றவன் "முடிபுனை கடிகை நாள்மொழின்", என்றான். அவன் கருத்து முடி புனைதற்கு உரிய நாழிகையும் நாளும் சொல்லுமின் என்பதே. நாளும் நாழிகையும் என்பதே

முறையாயிருக்க, அம்முறை மாறிக் கம்பர் அமைத்துக் கூறியது அதில் ஒரு அமங்கலக் கருத்தைக் குறிப்பால் தோற்றுவிப்பதற்காகவே. அஃது யாதெனில் 'முடிபுனைதலைத் தடுக்கின்ற நாள்' என்றும் அத்தொடர்மொழி பொருள்படும், புனை = புனைதல் முதல் நிலைத்தொழிற் பெயர். கடிகை = கடிதல், விலக்குதல்.

முத்தநாதன் தீய எண்ணங் கொண்டு மெய்ப்பொருள் நாயனரை அணுகினன். அவர் அவனை வணங்கி நின்று "மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ" என்றார். அவர் கருத்து 'நன்மை மிகும்படி என்பெருவாழ்வாகிய சிவமே ஈண்டு என்னைத்தேடி இங்கே எழுந்தருளியது போலத் தேவரீர் எருந்தருளியதற்கு யான் செய்த நல்வினை யாதோ' என்பது. ஆனல் வேறு கருத்தும் அச்சொற்றொடரில் அமைந்திருக்கக் காணலாம். "**மங்கலம் பெருக**" என்ற **சொற்றொடர் தாலியறுபட** என்றும் பொருள்படும். 'மங்கலம் பெருகிற்று' என்பது ஒரு மங்கல வழக்கன்றோ? "என் வாழ்வு வந்தணைந்தது" = என் வாழ்நாளாகிய விளக்கு மங்கிற்று என்றும் பொருள் தரும்.

இங்ஙனம் ஒன்று கருதிச் சொல்லும் சொற்றொடர் வேறு பொருளும்பட்டு அதற்குரிய பயனையும் தந்த வேளைகளில் "**யானும் அறியேன் அவளும் பொய் சொல்லாள்**" என்ற முதுமொழி வழங்கப்பெறும்.

சில மக்கள் யாதொரு குறிப்பும் இல்லாமலே எப்போதும் அமங்கலமான சொற்களைக் கூறுவது வழக்கம். சில வேளைகளில் அச்சொற்கள் அப்பொருளைத் தந்துவிடுவதும் உண்டு. அதற்கு எடுத்துக் காட்டாக ஒரு கதை வழங்கி வருகின்றது. ஒரு பிராமணன் தன் மனைவியை அடிக்கடி "விதவை" என்று திட்டுவது வழக்கம். அவன் திடீரென நோயுற்றான். 'செத்துப் போவோமே' என ஐயுற்றுப் புலம்பினன். அப்போது அவன் மனைவி, அவனை நோக்கி "ஏ பிராமணா உன் வாக்குப் பலித்தது; இப்போது என் வீணா புலம்புகின்றாய்" என்றாளாம். அதனல் '**பிராமணா உன் வாக்குப் பலித்தது**" என்ற முதுமொழியும் வழக்கில் உள்ளது.

இயன்றவரை அமங்கலமான சொற்கள் தம் வாயிற்றோன்றாமல் நினைந்து பேசுவதே நாகரிக மக்களின் கடமையாகும்.

திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரர் கொள்ளிடத்தில்
18—4—54-ல் தீர்த்தம் அளித்த காட்சி



இவ்விழா திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்
நிறுவப்பெற்ற நிதியிலிருந்து நடத்தப்பெற்றது.

---



1954 மே மாதம் 20-ந்தேதி ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்
266-ம் ஆண்டு நினைவு நாளன்று ஏழைகட்கு திருப்பனந்தாள்
ஸ்ரீ காசிமடத்தில் அன்னமளிக்கப்பெற்ற நிழற்படம்

**1129-ம௵ கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில்**

## கலைக்கோவிலில் வரப் பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 3078 to 3088 | Peeps into Saraswathi Mahal | S. Gopalan |
| 3089 | திருஞானசம்பந்த நாயனர் புராணம் (2124–2225) | திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் உரை |
| 3090 | ஷை (2531–2646) | ஷை |
| 3091 | ஷை (2641–2735) | ஷை |
| 3092 | ஷை (2736–2818) | ஷை |
| 3093 | ஷை (2810–2911) | ஷை |
| 3094 | ஷை (2912–3015) | ஷை |
| 3095 | திருஞானசம்பந்த நாயனர் புராணம் (முதல் நூறு பாடல்கள் படங்களுடன்) | தருமபுர ஆதீனம் |
| 3096 | திருத்தொண்டர் புராணம் படங்களுடன் (ஆறும் பகுதி) | திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் |
| 3097 | அன்பநாதபுரம் வகையரா தர்மபாகம் எஸ்டேட்டின் 1951–52-ம் ஆண்டின் நிர்வாக அறிக்கை | |

| | | |
|---|---|---|
| 3098 | வாரவழிபாட்டுத் துணைவன் | இராமலிங்கம் உயர்நிலைத் தொடக்கப் பள்ளி வேலூர் |
| 3099 | ஷை | |
| 3100 | கோலாம்பூர் – முதலாவது சைவத் திருமுறை மகாநாடு விழா தலைமைஉரை | மூவார் புலவர்மணி S. பொன்னம்பலம் J. P. அவர்கள் |
| 3101 | ஷை | ஷை |
| 3102 | ஷை | ஷை |
| 3103 | குமரேச சதகம் | இராமலிங்கம் உயர்நிலைத்தொடக்கப்பள்ளி- வேலூர் |
| 3104 | ஷை | |
| 3105 | நீதி மஞ்சரி (சொற்பொருளுடன) | ஷை |
| 3106 | ஷை | ஷை |
| 3107 | தலைவர்களுக்கு பாரதிகாட்டும் வழி | திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் திருச்சி வானொலியப்பேச்சு |
| 3108 | ஷை | ஷை |
| 3109 | சைவாநுஷ்டானவிதி | தருமபுர ஆதீனம் |
| 3110 | முருகவேள் பன்னிருதிருமுறை (தொகுதி–3 பகுதி–4) | ராவ்பகதூர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை M. A. |
| 3111 | சிவபூஜாவிதி | தருமபுர ஆதீனம் |
| 3112 | ஆத்மாஞ்சலி | இசைப்பாவலர் என். எஸ். சிதம்பரம் |
| 3113 | விவேக சிந்தாமணி (குறிப்புரையுடன்) | இராமலிங்கம் உயர்நிலைத் தொடக்கப்பள்ளி- வேலூர் |
| 3114 | ஸ்வர்ணபுரி பஜனை முதலாண்டு அறிக்கை | ஸ்ரீராமநவமி உற்சவ கமிட்டி – ஸ்வர்ணபுரி |
| 3115 | திருவடிமாலை | திருவல்லிக்கேணி – தமிழ்ச்சங்க வெளியீடு |
| 3116 | திருமந்திர விளக்கம் | யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் |
| 3117 | குறுந்தொகை விருந்து | திரு அ. சுருளியாண்டிப் பாவலர் |
| 3118 | திருமூலர்–திருமந்திரம் கயிலாய சித்தர் உரை | திருவாவடுதுறையாதீனம் |
| 3119 | கூட்டு வழிபாட்டுப் பாடல்கள் | திருவருள் தவநெறி மன்றம் மதுரை |
| 3120 | சிவாலய வழிபாடு செய்யும் முறையும் தோத்திரப் பாக்களும் | சித்தாந்த சைவ ஞானநிஷ்டர் உயர்தவ சிவானந்த அடிகள் |
| 3121 | திருமந்திர மாநாடு வாழ்த்துரை | தருமபுர ஆதீனம் |
| 3122 | ஸப்தரிஷிநாடி (பாகம்–2) விருஷப லக்னம் | Madras Government Oriental Series |
| 3123 | தென்னிந்திய கோயிற்சாசனங்கள் (பாகம்–1) | Do |
| 3124 | கர்நாடக ராஜாக்கள் சவிஸ்தார சரித்திரம் | Do |
| 3125 | பரத சித்தாந்தம் | Do |
| 3126 | Rice cultivation Japanese Method | The Director of Information & Publicity Govt. of Madras |
| 3127 | God as Mother | Sri Swami Chidananda Sarswathi |
| 3128 | Siva's Treasure | Seth Moolji Dayal |
| 3129 | Reader's Digest | (December 1953) |
| 3130 | Business Directory (Second issue 1953-54) | |
| 3131 | Sri Kampahareswara Swami Temple Tirubuvanam | Dharmapura Adhinam |

| | | |
|---|---|---|
| 3132 | Life of Swami Sivananda in pictures | Yoga Vedanta Forest - University-Anandakutir-Rishikesh |
| 3133 | Republic Day Souvenir (Madras 26-1-54) | Government of Madras |
| 3134 | கூட்டு வழிபாட்டுப் பாடல்கள் | திருவருள் தவநெறி மன்றம் மதுரை |
| 3135 | திருக்கேதீச்சர தேவாரத் திருப்பதிகங்கள் | வித்துவசிரோமணி ஸ்ரீமத் ந. ச. பொன்னம்பலம் பிள்ளை உரை |
| 3136 | தோத்திரப் பாடல்கள் | திருவெம்பாவை, திருப்பாவைகுழு |
| 3137 | திருத்தணி | ஸ்ரீ ஜி. துரைசாமி நாயுடு நிர்வாக ஆட்சியாளர் |
| 3138 | The Proceedings and speeches at the Reception on Sir Kanthiah's appointment as Minister of Industry, Housing and Social Services. | Cultural Social and religious organisations of Tamils in Colombo |
| 3139 | சித்தாந்த சைவ வினவிடை | தருமபுர ஆதீனம் |
| 3140 | ௸ | Do |
| 3141 | முப்பெரு நூல்கள் தொகுப்பு (சிவபுராணம், திருவெம்பாவை, திருக்குறள்) | ஸ்ரீ காமகோடி கோசஸ்தான வெளியீடு—கும்பகோணம் |
| 3142 | முருகன் துதிமாலை | ஸ்ரீ. வெ. வேலாயுதச் செட்டியார் |
| 3143 | Pilgrimage to Badri and Kailas | Sri Swami Sivananda |
| 3144 | திரு அருட்பா | வடலூர் ஸ்ரீ விசாலாக்ஷி அம்மையார் சன்மார்க்க தவச்சாலை |
| 3145 | Bulletin of the Government Oriental Manuscripts Library Madras (Vol 7 No. 1) | Sri T. Chandrasekaran, M.A. L.T. |
| 3146 | ஸ்ரீ தியாகப்பிரும்ம (எட்டாவது) ஆராதனை & சங்கீத விழா மலர் 1954) | ஸ்ரீ தியாகப் பிரும்ம மஹோத்ஸவ ஸபா, கும்பகோணம் |
| 3147 | விநாயகர் அகவல் (ஔவைப் பிராட்டியார் அருளிச் செய்தது) | ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஆஞ்ஞைப்படி வெளியிடப் பெற்றது |
| 3148 | Religion & Philosophy in Ancient Tamil Classics | The Dharma Thondusabha |
| 3149 | முருகவேள் பன்னிருதிருமுறை (தொகுதி-3 பகுதி-5) | ராவ்பகதூர்—தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை M.A. |
| 3150 | Body & Soul | Arogya Asramam |
| 3151 | The Journal of the Tanjore Saraswathi Mahal Library (Vol 9 No. 1 1953) | Sri. S. Gopalan, B.A., B.L. |
| 3152 | வேதமுடித்தேசிகமாலை | திருவல்லிக்கேணி—தமிழ்ச்சங்க வெளியீடு |
| 3153 | திருமந்திர மாநாட்டு மலர் | திருவாவடுதுறையாதீனம் |
| 3154 | சென்னை ஸ்ரீ வைஷ்ணவ மகாசங்கம் வெள்ளி விழா | ஸ்ரீ வைஷ்ணவ மகா சங்கத்தினர் |
| 3155 | இறைதத்வமும் ஸந்த்யோபாஸனையும் | மஹா கவி. திரு. நா. பிச்சுமணி அய்யர் |
| 3156 | பழனி பஞ்சகம் "வேல்" நூற்றெட்டு | Do |
| 3157 to 3158 | திருப்பனந்தாள்—செந்தமிழ்க்கல்லூரி 10-ஆம் ஆண்டறிக்கை | செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள்—வெளியீடு |

Page number not counted

| | | |
|---|---|---|
| 3159 | Cattle Registration in India | Sri. D. M. Anand |
| 3160 | Soil Conservation in India | Do |
| 3161 | திருவத்திகிரித் திருமாலை | திருவல்லிக்கேணி தமிழ்ச்சங்க வெளியீடு |
| 3162 | திருமலைமாலை | Do |
| 3163 | Guruvayurappan College Miscellany | Guruvayurappan College Calicut |
| 3164 | கந்தபுராணம் (2-ம் பகுதி) | திருப்பனந்தாள் - ஸ்ரீ காசிமடம் |
| 3165 | திருக்கொண்டீசரத் திருப்பதிகங்கள் | தருமபுர ஆதீனம் |
| 3166 | ஆதித்யஹ்ருதயஸ்தோத்ரம் | |
| 3167 | கோவூர் திருமேனீச்சரம் | ஸ்ரீ ம. பாலசுப்பிரமணிய முதலியார் |
| 3168 | திருமுறை தோத்திரத்திரட்டு | திரு. க. வெ. அருணகிரி முதலியார் |
| 3169 | திருப்போரூர்க்கோவில் வரலாறு | திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் |
| 3170 | To Badrinath | Sri K. M. Munshi |
| 3171 | The Kovur Temple | Sri. M. B. Mudaliyar |
| 3172 | அறம் வளர்த்த நம்பி | சுவாமி சித்பவானந்தர் |
| 3173 | கயிலைமலை யாத்திரை | Do |
| 3174 | பழனி பஞ்சகம் "வேல்" நூற்றெட்டு | மஹாகவி திரு. நா. பிச்சுமணி அய்யர் |
| 3175 | இறைதத்வமும்ஸந்த்யோபாஸனையும் | Do |
| 3176 | முருகவேள் பன்னிருதிருமுறை (தொகுதி-4 பகுதி-1) | ராவ்பகதூர் - தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை |
| 3177 | திருக்காரிசேரி தலவரலாறு வசனம் | திரு. S. ஆவுடையப்ப பிள்ளை |
| 3178 to 3179 | திருபனையூர்த் திருப்பதிகங்கள் | தருமபுர ஆதீனம் |
| 3180 | பூம்பாவைத் திருப்பதிகம் | திருப்பனந்தாள்—ஸ்ரீ காசிமடம் |
| 3181 | செவ்வைச் சூடுவார் இயற்றிய பாகவதம் (2-ம் பாகம் 10, 11, 12, ஸ்கந்தங்கள்) | மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் |
| 3182 | காரைக்கால் அம்மையார் அருளிய அற்புதத்திருவந்தாதி | "சித்தாந்த செம்மணி" சு. சிவகாமி அம்மையார் |
| 3183 | கோவைகிழார் எழுத்தோவியங்கள்—நூல் பட்டியல் | கோவை நிலையம் பதிப்பகம் லிமிடெட் |
| 3184 | The Art of Life in the Bhagavad Gita (H. V. Divatia) | Sri K. M. Munshi<br>Sri. K. Chandrasekara Ayyar |
| 3185 | பழனியாண்டவர் மயில்விடுதூது | கவியரசு கு. நடேச கவுண்டர் |
| 3186 | சிவஞான சித்தியார் சுபக்கம் மூலம் (முதலாம் சூத்திரம்) | அராலி தெற்கு ஸ்ரீ வே. கந்தையா |
| 3187 | திருப்பேரூர் பட்டிப்பிள்ளையார் | திருப்பேரூர்பட்டிப் பெருமான் தேவஸ்தான வெளியீடு |
| 3188 | ,, பட்டி முருகன் | Do |
| 3189 | ,, பட்டிக்கூத்தர் | Do |
| 3190 | ,, பட்டித் திருமால் | Do |
| 3191 | ,, பட்டிப் பெருமான் | Do |
| 3192 | ,, பச்சைநாயகி அம்மாள் | Do |
| 3193 | ,, அதிமூர்க்கம்மன் | Do |
| 3194 | திருவிற்குடி வீரட்டானத் திருப்பதிகம் | தருமபுர ஆதீனம் |
| 3195 | ,, ,, | Do |

# திருப்பனந்தாள்
# ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள்

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | .... | 0 | 1 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | .... | 6 | 0 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | .... | 3 | 0 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் | .... | 2 | 8 |
| 5 | திருநாவுக்கரசர் தேவாரம் | .... | 1 | 0 |
| 6 | சுந்தரர் தேவாரம் | .... | 1 | 0 |
| 7 | திருவாசகம் | .... | 0 | 6 |
| 8 | திருக்கோவையார் | .... | 2 | 0 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு | .... | 0 | 9 |
| 10 | திருமந்திரம் | .... | 1 | 8 |
| 11 | பதினோராந்திருமுறை | .... | 1 | 4 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (மறுபதிப்பு அச்சில்) | | | |
| 13 | திருக்கைலாய ஞானவுலா உரையுடன் | .... | 0 | 8 |
| 14 | பெரிய புராணம் | .... | 2 | 8 |
| 15 | அகத்தியர் தேவாரத்திரட்டு | .... | 0 | 6 |
| 16 | திருவிளையாடற் புராணம் | .... | 3 | 0 |
| 17 | தாயுமானவர் சுவாமிகள் பாடல் | .... | 1 | 4 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் | .... | 1 | 12 |
| 19 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள் | .... | 2 | 12 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் | .... | 2 | 0 |
| 21 | ,, தக்ஷகாண்டம் | .... | 1 | 8 |
| 22 | கந்தபுராண வசனம் | .... | 2 | 8 |
| 23 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | .... | 0 | 4 |
| 24 | கந்தரனுபூதி | .... | 0 | 2 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் | .... | 0 | 6 |
| 26 | கந்தர் கலிவெண்பா மூலம் மட்டும் | .... | 1 | 0 |
| 27 | கந்தர் கலிவெண்பா, திரு. பட்டுச்சாமி ஓதுவார் மறுபதிப்பு அச்சில் | | | |
| 28 | நீதிநெறிவிளக்கம்—ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் | .... | 0 | 8 |
| 29 | சகலகலாவல்லிமாலை—ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | .... | 0 | 1 |

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 30 | அபிராமி அந்தாதி கி. வா. ஜ. குறிப்புரையுடன் (மறுபதிப்பு அச்சில்) | | |
| 31 | சிவஞான சித்தியார், ஆங்கிலம், ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் (மறுபதிப்பு அச்சில்) | | |
| 32 | ஷை ஹிந்தி மட்டும் .... | 1 | 0 |
| 33 | திருக்குறள்—அறத்துப்பால் ஹிந்தி மொழிபெயர்ப்பு | 1 | 8 |
| 34 | திருக்குறள்—பொருட்பால் ,, .... | 2 | 8 |
| 35 | திருக்குறள்—காமத்துப்பால் ,, .... | 1 | 0 |
| | ஷை 33, 34, 35 திருக்குறள் 3 புத்தகமும் சேர்த்து வாங்கினால் கிரையம் .... | 4 | 0 |
| 36 | திருக்குறள் தமிழ்மறை K. M. வேங்கடராமையா M. A., B. O. L. அவர்கள் குறிப்புரையுடன் .... | 0 | 12 |
| 37 | திருக்குறள்—பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் .... | 0 | 2 |
| 38 | முதுமொழி மேல் வைப்பு .... | 0 | 12 |
| 39 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் .... | 0 | 6 |
| 40 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா—மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்—மதுரைக் கலம்பகம்—நீதிநெறி விளக்கம்—மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை—மதுரை மீனாட்சியம்மை குறம் .... | 2 | 12 |
| 41 | திருவாரூர் நான்மணிமாலை — முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் .... | 1 | 4 |
| 42 | சிதம்பர மும்மணிக் கோவை—சிதம்பரச் செய்யுட்கோவை—தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை .... | 1 | 0 |
| 43 | பண்டார மும்மணிக் கோவை — காசிக் கலம்பகம்—சகலகலாவல்லி மாலை .... | 1 | 0 |
| 44 | சிதம்பரச் செய்யுட்கோவை .... | 0 | 12 |
| 45 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் .... | 1 | 0 |
| 46 | தமிழிசைப்பாக்கள் .... | 0 | 8 |

நிர்வாக ஆசிரியர் :- **T. M. குமரகுருபரன் பிள்ளை** B. A., B. L.

கிடைக்குமிடங்கள் :-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. தியாகராச விலாஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

**குறிப்பு :- ஷை விற்பனைத் தொகை "குமரகுருபரன்" பத்திரிகையைச் சாரும்**

அச்சிட்டது :— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-54

